# முகவுரை.



மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

பிறவிற் றீயினன் பாலிற படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே.

திருநாவுக்கரசர் தேவாரம்

அன்புரு அறிவுரு இன்புரு என்று மறைகள் முழங்கும் பரம்பொருளை "ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியல்லன்" என்று மெய்யன்பர் விளக்குவது தமிழ் மக்கள் அறிந்த உண்மையே, "அம்மையேயப்பா வொப்பிலா மணியே அன்பினில் விளைந்தவாரமுதே" எனவும் "அப்பனீ யம்மையுநீ யண்ணனுநீ" எனவும், தாயான செல்வன்' எனவும் வாக்கு மனமிறந்த வள்ளலை வழுத்துவது தமிழர் மரபாகும். பிறபல நெறிபற்றிய மக்களெல்லோரும் இறைவனை ஆண்பால் என்ற எல்லையில் அடக்க விரும்புவது உண்மையே. அவன் பால், திணை, இடம், காலம் என்ற எல்லைகளைக் கடந்தவன் என்பது தமிழ மக்கள நன்கறிந்துள்ள உண்மையாம். தமிழகம் எங்கும அருள்வள்ளல் அமர்வதற்

கெனப் பல பெருங்கோயில்கள் அமைந்துள. சிவபரஞ்சுடரை நாடும் அன்பர் குழாங்களுக்கு உரிய கோயில்கள் ஆயிரத்தெட்டு என்பர். மூவர் முதலிகள் தேவாரம் அருளிச் செய்த காலத்தே இவை விளங்கின என்பர். திருமால் என்ற நாமரூபத்தால் இறைவனை வழிபடும் அன்பர் குழாத்துக்கு நூற்றெட்டுத் திருப்பதிகள் உள என்பர். ஆழ்வார்கள் அருளிய பிரபந்தங்களைப் பெற்ற இவை இறைவன் அருள் விளக்கம் விளக்குவன ஆகும் எனவும் உரைப்பர். இந்த இரு வகுப்பிலும் அடங்காத சிவாலயங்கள் பலவும் திருமால் கோயில்கள் பலவும், முருகன் கோயில்கள் பலவும், பிறபல தேவாலயங்களும் நம் நாடெங்கும் இந்நாளில் உள்ளன. அவற்றுட் சில புராணம் பெற்றனவாகவும் உள்ளன. வடமொழியிற் புராணம் இருப்பது தலங்களின் பெருமைக்கு உறுதுணையாகும் என்று கருதிய அன்பர்கள் பெரும்பான்மையான திருத்தலங்களுக்கு வடமொழிப் புராணங்களே காண்பாராயினர். சில திருப்பதிகளுக்குத் தென்மொழிப் புராணங்களும் தோன்றியுள்ளன. இங்ஙனம் புராணங்களைப் பெறாதேயிருந்தும் பல்லாயிரக் கணக்கான மக்கள் அன்போடு போற்றி வணங்கி அவரவர் நினைத்த யாவையைப் பேறுகளையும் எய்தவுரிய நிலைக்களங்களாக அமைந்த பல தலங்கள் இன்றும் நம நாட்டில் உண்டு. இவை சில புதுப் பிரபந்தங்களைப் பெற்று விளக்கமுறுவதும் உண்டு.

திருவரங்கத்திற் பேரன்பு பூண்டிருந்த பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்ற திவ்விய கவிஞரும், திருவருணையிற் பேரன்பு பூண்டிருந்த எல்லப்ப நாவலர் என்ற புலவர் பெருமானும் இயற்றிய பல சிறுபிரபந்தங்கள் உண்டு. திருப்

புகழ்ச்செல்வர் அருணகிரியார் அமுதமய வாக்கின் அருமையைத் தமிழ்பேசும் குழவிகளும் அறியும். பட்டினத்தடிகள், தாயுமானவா, இராமலிங்கசுவாமிகள் முதலிய பெரியோர் அருளிய செய்யுட் செல்வங்கள் பக்திப் பெருநெறிக்கு இடையிடையிட்ட தூண்டா விளக்கங்களாக உதவுகின்றன நல்லோர் சென்ற நெறியைப் பின்னோரும் பின்பற்ற முயல்வது இயல்பே என்பதனைச் சென்ற நானகைந்து நூற்றாண்டுகளாகத் தமிழ்நாட்டில் எழுந்த பல அந்தாதி கலம்பகம் தூது உலா கோவை முதலிய பிரபந்த வகைகள் நன்கு விளக்குகின்றன.

இக்காலைய அறிஞர் பலர் 'பிரபந்தங்கள் இயற்றுவதும் இறைவனை வழுத்துவதும் பழைய முறை; உண்மைப் புலமை இருப்பின் அது புதுப் புது நெறிகளில் நுழைந்து புதுப் புது நலன்களை விளக்கி மொழியின் ஆற்றலை வளர்க்க வேண்டும்." என்பர் இஃது உண்மையே என்பதை நன்கு உணர்ந்து, புதுக் கவிதை யுலகில் மகுடம் பூண்ட திரு. சுப்பிரமணிய பாரதியார் புதுமை வழிகளிற் சந்தங்களைப் படைத்துக்கொண்டு பல புதிய பொருள்களைப் பற்றிக் கவிதைகள் புனைந்தனர்.

புதுத் துறைக்கு அடிகோலிவைத்த அப்புலவர் கவிதைகளிற் பெரும்பாலன பழைய நெறிக்கு அரணாக நிற்பன என்று ஒருவர் கூறத்துணிந்தால், நவயுகச் செல்வர்கள் நகையாதிரார் அவர் நகைப்பினும் உண்மை அதுவே என்று துணிந்து கூறலாம் வேதாந்தப் பாட்டுக்கள் கண்ணன் பாட்டுக்கள் தேவி கீதங்கள் முதலியவை பழைய நெறியைப் புதுவதுவதில் விளக்குவன, பாஞ்சாலி சபதமும் ஸ்வசரி

தையும் பழமையை மறைத்த புதுமை முறைபொருந்தி யமை ந்தன. திருப்பள்ளி யெழுச்சி திருத்தசாங்கம் நவரத்தின மாலை தோத்திரப் பாடல்கள் என்பவை முழுவதும் பழைய நெறியையே பின்பற்றி அமைந்தன. பிற பாட்டுக்கள் புதுமை விளக்க வந்தவை என்று கூறலாம். இங்ஙனம் கூறுவதால் பாரதியார் புதுமை மணத்துக்கு ஒரு குறையும் விளைந்து விடாது, பழமையை முற்றிலும் வெறுத்து ஒதுக்கி நிமிர்ந்து தனித்து நிற்கும் ஆற்றல் புதுமைக்கு இல்லையென்பதே விளங்கும். பழமையும் புதுமையும் வலக்கரமும இடக்கர மும் போல இணைந்தே யிருப்பது உலக இயல்பு என்பதை உயிர்வகை ஒவ்வொன்றிலும் காண்கிறோம். அங்ஙனமே உயிர்ச்சக்தியுள்ள கவிதைச்செல்வமும் இருமையும் பொருந்த அமைவதேயாகும் என்பதை அறிஞர் ஏற்றுக்கொள்வர். இந்த உண்மையை உளத்திற்கொண்டு செய்யுட் செலவத் திற் றிளைக்க விரும்புவோர் தத்தமக்கு எவ்வெத்துறையில் மிக்க சுவை தோன்றுமோ அவ்வத்துறையிலே முயறசி புரிந்து பயன்பெற நினைப்பதே அடைவாகும்.

மோனை எதுகை முதலிய மூட்டுக்கட்டைகள் வளருங் கவிதைக்குத் தடை விளைக்கும் என்பது மலையாளிகள் கருத்து ஆகும். பாரதியார் புதுமைக்கவிதை ஒவ்வொன்றிலும் மோனை எதுகைகள் முத்து முத்தாக அமைந்திருப்பதை, அவற்றை அனுபவித்துப் பாடுவோர் அறியாதிருக்க இய லாது ஆரிய மொழிக்கும் அதன் இனமாகிய பிறமொழிக ளுக்கும் இன்றியமையாத செய்யுளங்கம் என்று கருதப்பெ றாத மோனை எதுகைகளே தமிழ்ச்செய்யுளின் தனிச்சிறப்பை விளக்குவன. இவற்றின் பெருமையை மதியாது தமிழுக்கு

இவை வேண்டா என்று உரைக்கத் துணிவோர் தமிழ்மகளின் உயிர் நிலையை அறிந்து தமது கருத்தை மாற்றிக்கொள்ள வேண்டும். சங்கச்செய்யுளில் இந்த நியதிகள் இல்லையே என்பார்க்கு, அவற்றின் நடையும் பிற்காலச்செய்யுள் நடையும் வெவ்வேறாக இருப்பதும் இவற்றின் போக்கே மாறியிருப்பதும், நோக்கமே வெவ்வேறு வகையாய் அமைந்திருப்பதுமே சிறந்த காரணங்களாக எடுத்துக்காட்டத்தக்கனவாம்.

இனி ஒரு சிலர் "தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு இந்நாளில் வேண்டுவது உரை நடையே, செய்யுள், அளவு கடந்து வளர்ந்து விட்டது, இனி அதன் வளர்ச்சியை ஒடுக்கி உரை நடையைப் பெருக்க வேண்டும்" என்று கூறுவது உண்டு. தமிழ்மொழி பூரண வளர்ச்சி பெற்று உலகத்தினை ஆண்ட பல நூற்றாண்டுகளின் பிறகு வளர்ச்சியும் இயக்கமும் பெற்ற மொழிகளை எடுத்துக்கொள்வோம். அவற்றுள் ஒன்றேனும் இன்று "எமது வளர்ச்சிக்கு உரை நடையொன்றே போதும், செய்யுள் நடை வேண்டா" என்று கூறுவது உண்டா? கூற நினைப்பதும் இல்லையே. அங்ஙனம் இருக்க, இருதுறைக்கும் போதியவளவு ஆற்றல் பெற்றிருக்கும் நம் அமுதத் தமிழ்மொழி ஒரு துறையே வளர்வது சாலும், மற்றொரு துறை அருகுக என்று நினைப்பது அறிவுடைமையின்பாற் படுமா? அயல்நாடுகளில் ஒரு நாளில் நூற்றுயிரக் கணக்கில் புற்றீசல் போல எழுந்த உரைநடை நூல்கள் எல்லாம் நீண்ட வாழ்வு படைத்து உள்ளனவா? நம் நாட்டில் இந்த நூற்றாண்டிலே எத்துணை உரை நடை நூல்கள் எழுந்தன? இவற்றுள் எத்துணைய இரண்டாம் பதிப்பே பெறாது மறைந்தன? இந்தக் கணக்கை

எவரேனும் சற்றுப் பொறுமையாய் எடுத்துப் பார்ப்பது உண்டா? ஒரு முறை நூற்றுயிரக் கணக்கில விலையாகிய புத்தகங்கள் பிறகு தேடுவாரற்றுப் பொதுப புததக சாலைகளின மூலைமுடுக்குகளில உறங்கிக்கிடபபது உண்மை யனுபவம் அன்றோ? ஆதலின் ஒரு நூல நிலையான புகழ்பெறுதற்கு அதன் உள்ளுறை காரணமாகுமேயன்றி நடைகாரணம் ஆகாது எனபது வெளிப்படை, செயயுளாயினும உரைநடையாயினும் அதனை ஆககியோன் உண்மைப புலமை படைததவனாய் இருப்பின, அது என்றும அழிவுறாது. சில புலவர் பலலாயிரக கணககிலே செயயுள செயதும புகழபெறாது மறைநததுண்டு. ஒன்று இரண்டு செயயுள இயறறிய புலவா சிலர் அழியாப புகழோடு விளஙகுவதுமுண்டு இதறகுக காரணம கூறவும் வேணடுமோ? அவரவா வாய்மொழியே காரணததை விளககிவிடும. செய்யுட் செலவம் ஒரு நாட்டின் உண்மைப பெருமையை விளககும கருவியாதலால், அதன வளாச்சியில ஒவவொருவனும் ஊக்கம் கொளளல வேண்டும.

புதுமை நெறியிலே பல செயயுட்கள வளாதறகுரிய இக்நாளிலே பழமை நெறிபற்றிய சில செயயுட்கள ஆங்காங்கு தோனறுதலும நலமே. மலலிகை முலலை சாதி, சாமந்தி முதலிய மலாகளையே அணிந்து பழகிய தமிழ்ப் பெண்மணிகள இந்நாளில ரோஜாமலரிலும கனகாமபர மலரிலும் மனததைச் செலுததித் தம நாட்டுப் பழைய மலர்களை மறநது வருகின்றனராயினும் கதம்பம் எனற பெயரோடேனும சில சமயங்களில அவறறையும் அணிய விரும்புகின்றனர். அங்ஙனமே புதுமைக் கவிதைகளில் உளம் புகுத்

திய தமிழ் மக்கள் பழமை முறை பற்றிவரும் பிரபந்தங்களை யும் அவற்றில் உள்ள சுவையை அறியும் நோக்கத்தோடு பயின்று மகிழ்வர்.

இம்முறையாலே, தட்சிண கோகர்ணம் என்று காந்தத்தால் புகழ்பெற்றதும பழமை பொருந்த புராணம உடையதும புதுக்கோட்டைத் தமிழ மன்னர் நலத்துக்கு வழிபடு தெய்வமாகிய பெரியநாயகியையும் கோகர்ணநாதனையும தன்னகம் கொண்டதுமாகிய திருக்கோகர்ணம என்ற திருத்தலத்தைப் பற்றி முன்பு இயன்ற சில பிரபந்தங்கள முத்தமிழிலும உளவாதலால் நன்னுவலர் சென்ற அச்செந்நெறி பற்றியே அருள வெள்ளம் பொழியும திருவிழியும அனபரையாளும் கழன்மலரும் கொண்ட 'ஸ்ரீ பிரஹதம்பிகை' என்ற பெரியநாயகியின் துதியுருவமாக அமைந்த இப்பிள்ளைத் தமிழ் தமிழுலகிற புகுகின்றது.

பிள்ளைத் தமிழ் இலக்கணம் நன்குணர்ந்த பெரியோர்கள் மலிந்த தமிழகத்தே தனித்தமிழில் இச்செய்யுளை இயற்றி அன்னைக்கு அர்ப்பணம செய்யத் துணிவு கொண்டது, மறை மொழிகளையே மலர்களாகக்கொண்டு அருச்சிக்கும் திருவடியில மண்ணில விழுந்த மலர்களும புகுதற்கு இடம் பெறும உரிமையை நோக்கியே யாகும். "குற்றமே தெரிவார் குமார முனிசொற்ற பாவிலும ஓர் குறை சொல்வரால்" என்பது உண்மையேயாயினும, "பித்தா சொன்னவும் பேதையர் சொன்னவும பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ" என்ற கம்பர் கவி முழங்குவதை உலகம் அறியும்.

பிரபந்தங்கள் பலவகையாமாயினும் அவற்றுள் அந்தாதி, பிள்ளைத்தமிழ், கலம்பகம், உலா, கோவை என்ற வகைகளே மிகுதியாக வழக்கில் உள்ளன. பிரபந்த வகைகளையெல்லாம் தம் நாதநினைவு தீர நன்கு பாடிய மகாவித்துவான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் ஆண்பாற் பிள்ளைத் தமிழ் பெண்பாற் பிள்ளைத் தமிழ் என்ற இருவகைகளும் பல அமைத்துள்ளார்கள். அவர்கள் வைத்த வழிபற்றி இந்நூற்றாண்டிலும் சிலர் இப்பிரபந்தம் இயற்றியுள்ளார். இவற்றையெல்லாம் ஆதியோடந்தமாகப் பயின்று இன்புறுவோர் மிகுதியாய் இல்லாத இந்நாளில், ஆழத்திலும் அகலத்திலும் நாட்டம் இன்றிச் சொல்லடுக்கால் அவையை வெருட்டும் புலமையில் மருண்ட பலர் மிக்க இந்நாளில் தமிழ் மக்கள் ஆதரவை நாடி இச்செய்யுள் வெளி வருகின்றது.

இச்செய்யுளிற் பன்னூறு குறைகள் இருக்கலாம். இலக்கண நெறிப் பிறழ்ச்சி இருக்கலாம். ஆயினும் தெய்வத் திருவருள் பெறும் கருத்து முன்னாட் புலவர்க்கு இருந்தவளவில் எட்டுணையும் குறைவில்லை யென்பதே ஆசிரியோன் வணக்கத்தோடு தெரிவித்துக் கொள்வதாம். தெய்வத்தை எந்த உருவத்தால் நினைந்து, எக்காலத்தில், எந்நாட்டில், யாராயினும் அருள்வது என்பதே அதன் இயல்பாம். கண்ணனும் கீதையில் 'என்பக்தன் அழிவுறுவானல்லன்' என்று பிரதிஞ்ஞை செய்தான். கலமஷமிக்க சித்தமும் பாவத்திரயத்தால் வாழும் வாழ்க்கையையும் தக்கன தகாதன அறியாப் பேதமையும் உள்ள மாந்தர்க்கு இக் கலியுகத்தில் நாம சங்கீர்த்தனமே கதியாகும் என்பது ஒரு வடமொழிச் செய்யுளின் கருத்தாம். இதுபோன்ற பல நற் கருத்துக்களை

ஆன்றோர் செய்யுட்களாலும் நன் மக்கள் வாய்மொழிகளா லும் கேட்டுக் கேட்டுப் பழகியிருக்கும் தமிழ் மக்களுக்கு இப்பெரிய நாயகி பிள்ளைத் தமிழின் தோற்றம் மிகையாகத் தோன்றும்.

செய்யுள் செய்யும் துறையில் முப்பது ஆண்டுகளாகப் பயிற்சி பெற்றமையாலும், பல நல்லிசைப் புலவர்களது அரும்பொருட் பேழைகளிலே புகுந்து புகுந்து சொல்லும் பொருளும் கவரும் திறம் படைத்துண்மையாலும், இறைவ னருள் ஒன்றே துணையெனக் கொண்டு தொண்டைமான் நாட்டில் உத்தியோக பதவி வகித்திருக்கும் உரிமையாலும் தமிழ்த்திருப்பணி புரிவார் இனத்துள் எவ்வழியாலேனும் கலந்துகொள்ளல் வேண்டும் என உள்ளத்தில் எழுந்த ஆர்வத்தாலும், கடலிடையில் விழுந்தாரையும் காத்தருளும் கருணைவல்லியென அப்பெருமாட்டியின் புகழ் கேட்ட செய லாலும் வாழ்வுக்கடலில் விழுந்து தவிக்கும் ஒவ்வொரு உயி ரையும் தனது கழற்புணையால் கரையேற்றும் நாயகி அவளே என உணர்ந்த உறுதியாலும் இப்பிள்ளைத் தமிழை அவள் திருவடி மலரிற் சமர்ப்பிக்கின்றேன். இச் செய்யுள் இய ன்று இரண்டாண்டுகள் ஆகியும் அச்சுருவம் கொடுத்து உல கிற்குதவும் அமயம் இப்பொழுதே அமைவதாயிற்று.

தமிழ் மகளின் தவப்பேறாகத் தோன்றி அரும்பணிபுரிந்து தமிழ் மக்களைத் தமக்குப் பலவழியாலும் கடப்பாடுடை யாராகச் செய்து இருமதிமுன் சிவபதம் புகுந்த முதுபெரும் புலவர் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்கள் பார்வைக்கு இச்செய்யுள் அனுப்பப் பெற்றிருந்தது. அவர்

கள் அம்புலிப் பருவத்திலே சில திருத்தங்கள் தெரிவித்தார் கள் . . . வர் ஏன் விரு . . . . . . று திருத்தங்கள் எல்லாம் முறையே . . . மைக்கப் பெற்றன அவர்கள் எனது வேண்டு கோட்கிணங்கி ஒரு சாத்துக்கவி செய்து அனுப்பியிருந்தார் கள். அதனை இப்புத்தகம் அச்சுக்கு வரும்போது உபயோ கித்துக்கொள்ளலாம் என்று எண்ணி எனது தமிழ்ப் புத்தக சாலையில் வைத்திருந்தேன். இறைவன் திருவருள், தமிழ்த் தாய் புலம்ப, அப்புலவர் பெருமானை அழைத்துக்கொண் டது போன்று சாத்துக் கவியையும் மறைத்து விட்டது. பலமுறை தேடியும் அது அகப்படவில்லை, ஆகவே இச் செய் யுளுக்கு இனி எவரிடமும் சிறப்புப்பாயிரமோ சாத்துக்கவி யோ கேட்பதில்லை என்ற முடிவோடு இப்பொழுது வெளியி டப் பெறுகிறது.

இப் பிரபந்தம் நிறைவேறிய பிறகு, 'கம்பர் பிள்ளைத் தமிழ், திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ், நம்மாழ்வார் பிள்ளைத் தமிழ், சங்கரர் பிள்ளைத்தமிழ், முத்துமாரி பிள்ளைத்தமிழ் என்ற பிள்ளைத்தமிழ் ' பிரபந்தங்களும் சதாசிவப்பிரம்மேந்திர விஜயம் என்ற ஒரு காவியமும் நிறைவேறின. கம்பர்பிள்ளைத் தமிழ் காரைக்குடிக் கம்பர்கழகத்தில் அறிஞர் பலர் முன்னி லையில் விக்ரம ஆண்டு பங்குனி மாதத்தில் நிகழ்ந்த கம்பர் விழாவிலும் நாட்டரசன் கோட்டையில் நிகழ்ந்த கம்பர் விழாவிலும் அரங்கேறியது. கம்பர் கழகத்தார் அதனை அச்சிடுவதாகக் கூறி . . . வைத்திருக்கின்றனர். நம்மாழ்வார் பிள்ளைத் தமிழ் தி . . . . . . கணித் தமிழ்ச் சங்கத்தார் அச் சிட ஏற்றுக்கொண் . . . ல் அவர்களிடம் உள்ளது, சங்கரர் பிள்ளைத் தமிழ் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகள் திரு

முன்பு, மீடாமங்கலத்துக்கு அடுத்த பூவனூர்த் திருத்தலத்தில் சித்திரபானு சங்கர ஜயந்தியன்று அரங்கேறியது. சதாசிவப் பிரம்மேந்திர விஜயம் என்ற காவியத்தின் இரண்டாயிரம் செய்யுட்களும் நெரூரில் உள்ள சதாசிவப்பிரம்ம அதிஷ்டானத்தில் அரங்கேறின. உபநிடதச் செய்யுளும் இக்காவியமும் இந்நாளில் நெரூர்த்தலத்தில் யோக சமாதியின் பொருட்டு எழுந்தருளியிருக்கும் ஐம்மொழிப் புலமை படைத்த வேதாந்தகேசரி ஸ்ரீ. பிரணவானந்த சிவப்பிரம்மேந்திரஸ்வாமிகள் திருமுன்பு படனம் செய்யப்பெற்றுப் பரம அனுக்கிரகத்துக்குப் பாத்திரம் ஆயின. "வித்வன் மண்டலத்தின் பரிதோஷம் பெறுமளவும் கவிக்குப் பிரயோக விஞ்ஞானம் சாதுவாகத் தோன்றாது" என்பது மகாகவி காளிதாசன் கருத்தாம். அவ்வுண்மையை நன்கு அறிந்து, இச்செய்யுட்களைச் சமயம் வாய்த்தபோதெல்லாம் பல பெரியோர் முன் படித்துக் காட்டியுளேன். இறைவன் திருவருளால் இவை யனைத்தும் தக்க ஆதரவு பெற்று விரைவில் வெளிவந்து தமிழுலகுக்குப் பயன்படவேண்டும் என்பது எனது வேணவா ஆகும்.

சங்கத்தார், தமிழமுதம் ஊட்டி, அளியேனைத் தமிழ்ப் பணிக்கு ஆளாக்கிவைத்த மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் பேருதவியை உலகம் அறிய வெளியிடுவதே யான் அவர்கட்கு இயற்றும் சிறு கைம்மாறு ஆகும். தமிழ்மயமாய் விளங்கிய திரு. பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள் ஸ்தாபித்த தமிழ்ச் சங்கமும் சேதுபதி செந்தமிழ்க் கலாசாலையும் இல்லாதிருப்பின் எனக்கும் தமிழ்க்கும் தொடர்பு தோன்றுதற்கு இடம் இல்லை. ஆங்கிலக் கல்வியின் மோகம் வளரும் நாளிலே

என்னைத் தமிழ்ப்பயிற்சிக்கு ஊக்கிய எனது குலதனமாகிய வறுமைக்கும் ஒரு பெரு வணக்கம் உரியதாகும். இன்று எங்கள் குலத்தில் நால்வர் தமிழ்ப் பயிற்சி பெற்றவராய் இருப்பினும் தொடங்கிய நாளில் முன்னின்ற தனிப்பெருமை எனக்கே யுரியதாகும். இந்த உரிமையை ஒன்றுக்கும் பற்றாத சிறியேற்குத் தந்த தமிழ்த் தெய்வத்தின் திருவருளை என்றும் மறவேன்.

இனி இச்செய்யுள் அச்சேறிய வரலாறு சிறிது உரைக்கப்படும். ஒவ்வொரு பொருளும் விலையேறி வருகிற இப் பெரும் போர்க்காலத்தில் காகிதத்தின் விலை நாளுக்கு நாள் ஏறுவது நன்கு அறிந்ததும், பெரு நகரங்களில் என்ன விலை கொடுத்தும் காகிதம் வாங்குவதே அரிதாகத் தோன்றும் நிலைமையில், இறைவி திருவருளை இப் பிரபந்தம் வெளி வருவதற்கு ஒரு துணையைத் தந்தது. செய்த நன்றியை நாவாரப் போற்றி உலகம் அறியவைத்தல் நன்றி பெற்றவர்க்கும் பிறர்க்கும் நன்மை விளைக்கும் புண்ணிய கைங்கரியம் ஆதலால், இவ்வுதவி செய்தார் பெருமையைச் சிறிது உரைக்கத் துணிகின்றேன்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் உலக நலம் கருதிப் பல வகைத் தருமங்களை இயற்றுவதிற் பயின்று பயின்று புகழ் புனைந்த புண்ணிய மரபினர் என்பது தமிழகம் நன்கு அறிந்த உண்மையாம். அசுர மயமாக நிகழ்ந்து வரும் இக்காலப் போர்க் கிளர்ச்சியால் இம்மரபினரிற் பலர் தம் செல்வத்திற் பெரும் பகுதியை இழந்தது பத்திரிகை படிப்போர் எவரும் அறிந்ததே. செல்வக் காலையில் அரும் பெருந்தருமங்கள்

செய்த இக்குலத்தார் இன்றும் தரும நோக்கமுடையராய் இருப்பது இனியும் விரைவிலே இவர்கள் முன்னிலைமை பெறு தற்கு ஏற்ற அறிகுறியாகும். ஆடம்பரத்திற்கென்றே தருமம் செய்வார் பலர் உண்டு, உள்ள உணர்ச்சி தூண்ட லால், ஏழைகளுக்கு இரங்கித் தருமம் செய்வார் மிகச்சிலரே. ஆயிரம் செலவழித்து விருந்துண்ணும் பிரபுவின் மாளிகை வாயி லில் கஞ்சிக்குக் கதறுகின்ற ஏழைகளைத் துரத்திப்போட்ட நாய்கள் பல இருப்பது உண்மையே. இந்த ஆரவாரம் விரும்பாமல் தருமங்களை புரிந்துவரும் பரம்பரையிற் பிறந்த பொருள் வணிகர் புகழ், தென்னாட்டிலும் பிறநாடுகளிலும் ஆசந்திரார்க்கம் நிற்கின்ற ஆலய தருமம் வித்தியாதானம் அன்னதானம், தண்ணீர்ப்பந்தர் முதலிய தருமங்களால் என்றும் நின்று நிலவும்.

புகழுக்கே உடம்பெடுத்த பொருளவணிகர் மரபில் பலவான்குடியில் நெடுநாளாக நிலைத்த குலம் ஒன்று உண்டு. வயிரவன்கோயிற் பிள்ளையார் வகுப்பிற் குரிமைபூண்ட இக் குலத்தாருள் உயர்திரு, ராம கு. சுப்பிரமணியன் செட்டியார் என்ற செல்வருக்கும் திருமதி வள்ளியம்மை யாச்சி என்ற செல்விக்கும் தவப்புதல்வராகத் தோன்றிய திருவாளர், ராம கு.சு. குமரப்ப செட்டியார் என்ற செல் வச்சீமான் இப்பிரபந்தம் அச்சிட்டு வெளியிடும் முழுப்பொ றுப்பும் ஏற்றுக்கொண்டார். இவரது அன்னையார் குன்றக் குடியில் திருவாசக மடம் அமைத்து அனுதினமும் அடியார் களுக்கு அன்னதானம் செய்துவரும் சிவநேசச் செல்வர் சிவாச்செட்டியார் என்ற பழனியப்ப செட்டியார்க்கும் கோனாபட்டு கற்பக விநாயக கலாசாலையைப் பல்லாண்டு

நன்கு நடத்திய மகாதேவா என்ற முருகப்ப செட்டியார்க்கும் உடன்பிறந்த தமக்கையார் ஆவர். இவரது தந்தையாரும் இக்குலத்தாரும் பலவான்குடியில் திருவாசக பாடசாலை குமரகணபதி கோயில், திருக்குளம், நந்தவனம் முதலிய சிவதருமங்களில் ஈடுபட்டுள்ள பெருங் குணமணிகள் ஆவர். முதுமொழிக்காஞ்சி மூதுரை நல்வழி என்ற நீதிநூல்களின் பதிப்பு ஒன்று இவர் தந்தையாரால் தரும வெளியீடாகக் கற்பக விநாயக கலாசாலையின் மூலம் வெளியாகியது.

ஆண்டில் இளையரேயாயினும் அறிவுள்ளத்திற் பெரியாராகிய இவர் சிவபுராணத்திருவகவலை மாணிக்கவாசகர் குருபூசை வெளியீடாகத் தருமமாக வெளியிட்டுப் பலருக்கும் உதவினார். பிரதோடவிளக்கம் என்னும் வசன நூலும் இவர் உதவியால் சிவநேசச் செல்வர் வெளியீடாகப் பரோபகாரமாக வெளிவந்துள்ளது. சைவசித்தாந்த சமாஜத்தார் திருவாசகப்பதிப்புக்கு உரிய பொருளுதவியை முன்பணமாக இவரே மனமுவந்து செய்துள்ளார். குன்றக்குடியைச் சேர்ந்த சண்முகநாதபுரத்தில் ஷண்முக வித்தியாசாலைத் தருமத்தையும் நன்கு நடத்தி வந்து வருகின்றார். திருவையாறு அரசர் கல்லூரியிலே பயிலும் தமிழ் மாணவருள் ஒருவனுக்கு வேண்டிய எவ்வகை யுதவியும் இவர் செய்துவருகின்றார். குன்றக்குடி மலையடிவாரத்தில் திருநந்தா விளக்குத் தருமம் ஒன்று செய்துள்ளார். தமது அன்னையார் பெயரால் அமராவதி புதூர் மகளிர் இல்லத்துக்குப் பொருளுதவி செய்திருக்கிறார். கோனாபட்டு நகரத்தில கொப்புடையம்மன் திருக்கோயில் முன் உள்ள வளைவில்

மின்சார விளக்கு விளங்கத்தக்க பொருளுதவியை மனமுவந்து புரிந்துளர். இங்ஙனம் பலவகைத் தருமங்களிலும் இளமையிலேயே ஈடுபட்டு இன்னும் எவ்வெத தருமங்களை எங்கெங்கு எவர்பொருட்டு இயற்றலாம் என்ற எண்ணமே உடையாராய இருககும இச்செல்வா திருக்கோகர்ணம பெரியநாயகியின் பூரண அனுகரகததுக்குப் பாத்திரர் ஆகும் வண்ணம் இததருமததையும் ஏறறுககொண்டது தமிழ மககள பேறேயாகும. இவரும் இவர் குலமும் நல்வாழ்வு பெருகி நீடூழி வாழ இறைவி திருவருள நல்குக என அவள் திருக கழலகளை மனமார இறைஞசுகின்றேன்.

செயயாமற செயத வுதவிக்கு வையகமும
வானகமுமாற்றலரிது (வள்ளுவா)

புதுக்கோட்டை,
சித்திரபானு ஆனி.
22—6—42.

நா. கனகராஜய்யர்,
தமிழாசிரியர்.

## பாயிரம்.

### விநாயக வணக்கம்

---

1. பொருண்மணம் பொலியும் கவிமலர் தொடுத்துப்
புரைதவிர் உளத்தினால் நினையும்
புலவர்தங் கருத்தில் விளங்கொளி யாகிப்
பூரண வானந்த மயமாம்
அருண்மதம் பொழியும் கயமுகப் பெருமான்
அறுமுகன் வள்ளியை மணக்க
அடைந்தருள் பெரிய களிற்றர சாரும்
அமலனே ரிருகழல் பணிவாம்
தெருள்வளம் கனியும் புதுவையர் கோமான்
திருமுடி யணிசெயுங் கழலாள்
தேவர்கள் தேடி யறிவரும் பெருமைச்
சிவபரஞ் சுடரிடம் பொலிவாள்
மருள்மலங் கழற்றி யடியனே னுளத்தும்
வந்தருள் கோகனத் திறைவி
வண்மைசால் பெரிய நாயகி புகழாய்
வருபிள்ளைத் தமிழ்தழைத் திடவே.

### சிற்சபாநாதன்.

---

2. முனிவரர் மூவா யிரவரும் சுரரும்
முறைமுறை வணங்கியேத் தெடுக்க

முழுமுதற் றலைமை தனதெனு முண்மை
மூவகை யுலகமு முணராத
தனிவரு மெய்ம்மை யானந்த மயமாம்
தத்துவம் விளக்கிய நட்டம
தமனியப் பொதுவிற் குனித்த நாடகத்தன்
தாண்மலர் முடிமிசைப் புனைவாம.
பனிபடு வரையிற் பிறந்தே யனற்ப
பக்தியின் வலையினிற் பட்டுப
பற்பல தலத்தும் கோயில்கொண் டருளும்
பரவசக் கருணைப்பூண் செல்வி
இனியபைந் தமிழின் றலைமைபூ ணிறைவி
எழிலவளர் பெரியநா யகியின்
இணைமலர்க் கழல்கட் கிசைந்தசெந் தமிழின்
இணர்த்தொடை நன்குவாழ் கெனவே.

விசுவேசுவரன்.

3. முத்தியை யருளும் நகரங்கள் தமுள
முதன்மைகொள் திருத்தல மாகி
முழங்குறு கங்கை பெருகெடுத் தொழுகு
முறைமைகொள் காசியம் பதியிற்
சித்தியை விழையும் யோகியர் எவர்க்கும்
தெளிவுறக் காட்சிதந் தருளித்
திரும்புத லில்லாப் பெரும்பெயர் வாழ்வு
செகத்திலே யருள் செயும் பெருமான்

சத்திய வுருவ மெனத்தனை யடைவோர்
தாரக பிரமன் குணரத்
தந்தருள் விசுவ நாதனுந் தலைவன்
சரணங்கள் கைதொழுடைப் புகழ்வாம்
பத்தியை யுணர்வோர் மனத்தடத் தலர்ந்த
பாததா மரைகொளகோ கன்னப்
பார்ப்பதி பெரிய நாயகி புகழைப்
பரவிய தமிழ்தழைத் திடவே.

சிவனடியார்.

---

4. தங்குல மறந்து தந்நிலை மறந்து
தமக்குள தருமமு மறநது
தம்மையே சிவத்தின் திருப்பணிக் கெனவே
தகைமையாற கொடுததிடு பெரியா
சங்கர னருளிற றனயனை யரியத
தாரத்தைதக கையளித் தகலத
தந்நிலை விரத பங்க நேராது
சத்திய வாக்குரைத தனைமய
மங்கள வாழ்வு பரசிவ னடியார்
மனமகிழ் பணியெனத் துணிய
வல்லவ ரெனவே யுலகங்கள் புகழும்
மாதவா அடிமுடி புனைவாம்
பொங்கிய வளங்கள் பழுநிய தமிழ்ப்
புதுவையர் தலைவனை யாண்ட
புண்ணியச் செலவி பெரியநா யகியின்
பொலன்கழற் கணிபுனைந் திடவே.

## நல்லிசைப் புலவர்.

---

5. இலக்கண மைந்துந் தமைப்பணிந் திறைஞ்சி
யியன்றருற் றேவல்கள புரிய
இயற்றமிழ்த் துறையு மிசைததமிழ்த் தொடையும்
இறையவன் புகழுவிரித திடறகே
நலக்கவே பொருந்த வின்றுநன் கிருந்து
நாளேயே யழிந்திடு மனித்தா
நலமிலாச் சிறப்புப் புனேவது கருதா
நல்லிசைப் புலவரைப் பணிவாம்
அலக்கணி ணினேந்து நினேயுமுன் படியர்
அகம்புகுந் தவரவர் வேட்ட
அளவகல் வாழ்வு விழிக்கடை நோக்கால்
அருள்செயும் கோகனத் தெயவம
விலக்கறு மிறைவ னுற்றலே யுருவாய
விளங்கிய பெரியநா யகியாம
விமலேயின் கழலிற புனேந்திடு கவிதை
வியனுல கதினிலே பெறவே.

## அவையடக்கம்.

---

6. நாற்கவித் துறையும் முறைமுறை யறிந்த
நல்லியற் புலவர்சொல் புகழே
நயந்துதன் செவியி னேற்றருள் புரியும்
நாயகி கோகனத் திறைவி

பார்படு பொருளின் றிறனறிந் துணரப்
பச்சிளங் குழவியா மடியேன்
பாடலை யணியுந் திருவருட் பொலிவாற்
பரவச முறச்செவி சாய்ப்பாள

வேற்படைப் பெருமான் செயப்பவாய் மலர்ந்த
விரிந்தநான் மறையெனு மழலை
விருப்புடன் கேட்டு மகிழ்வது போன்றே
விழலனேன் புன்சொலுஞ் சுவைக்க

வேற்றுமெம் பெரிய நாயகி யன்னை
யின்னருள் வண்மையீ தன்றே
எளியருக் கெளிமை வலியருக் கருமை
யியைபுறு மிறைவியா மவளே.

நூல்

## 1. காப்புப் பருவம்

### நேரிசை.

7. திருநான் மறையின சிரத்தமர்ந்த
திருப்பொற் கழல்கள் வருந்தமுந்தை
செழிக்கும் புனலபா யமுனையிடைச
சிறுவர் காணக் காளியன்றன்
பெருமால் கழலத் திருநடனம்
பேணி யினிய குழலிசைத்துப்
பெரும்பா ரதப்போர்க் களத்தினிடைப்
பேச வரிய பொருள்பேசும

திருமால் கழல்கள் நாப்புகழ்ந்து
சிந்தை யாரத் துதிபுரிவாம்
திருக்கோ கனத்துச் சிவபெருமான்
தேவ தேவ னிடத்தமரும
பெருமா னிறைவி யருளகனிந்து
பிறங்கு விழியா ளடியவர்கள்
பேணு முருவ மெலா முடைய
பெருநா யகியைக் காக்கவென்றே. 1

சிவபிரான்.

8. கங்கை யடங்கு சடாடவியிற்
கதிர்கொள பிறையும் பணியுமனங்
கலந்து பொருந்தி யுறவாடக்
கருணை பழுத்த பரஞ்சுடரின்
சங்கை யறுந்து மறைபபெருநால
சாற்ற வரிய திருவுருவைத
தகவே யுளத்தில நிறுததியவன்
சரண கமலம் பணிகிறபாம்
தங்கை யெனவே பயோததிவாழ்
தலைவ னுரிமை கொண்டாடத்
தக்கன் இமய மலையரயன்
தனயை யெனவே பரிந்தழைப்ப
மங்கையுருவோ டடைந்துபர
மங்களததை மணந்தருளும்
மனங்கொள் பெரிய நாயகியை
வண்மை நலததாற் காக்கவென்றே. 2

## விநாயகர்.

---

9. பெருகுறு புனலைக் காகத்தி னடக்கிப்
பிறைமுடிப் பொருளையே நினைந்து
பிறங்கிய வளங்கள் பொலிதமி ழகத்திற்
பேச்சற நடந்துறு முனிவன்
அருகடைந் தவன்கைக் காகத்தை வாங்கி
யருள்வெள்ள மெனப்பரந் தோட
ஆர்புனை முடியன் னவாகுலக் கொடியாம்
ஆற்றென வுலகினுக் குதவும்
கருணையின் முகிலைச் செயப்பமா ணிக்கக்
காந்திகொள் கரியினைப் பணிவாம்
கடலினும் பெரிதாந் தமிழ்க்கலை யளாக்கும்
கடமைகொள் புலமையோ னவனை
அருள்புனை யடிமை யெனக்கொளு முரிமை
அருமறைத் தலைவிகோ கனகத்
தமர்ந்தரு ளிறைவி பெரியநா யகியை
அன்பொடு காத்தருள் கெனவே. 3

## முருகப்பிரான்.

---

10. இருக்கின் மறைந்த வொருபொருளை
எளிய வரிய செம்பொருளை
இதுவென் றுணர வுலகுயிர்கட்
கிசைக்கும் கடம்பூண் டோளிறைவன்

செருக்கின் மலிந்த வவுணர்குலம்
　　தேவர்க் கியற்றுந் தீமையெலாம்
செயயோன் கதிர்முன் பனிபோலப்
　　தீயநதே யொழியப் புரியயிலோன்
பொருப்பின் முடியில் விளையாடு
　　புலமைப் பெருமான் கழல் பணிவாம்
புவியும் விண்ணும் பிறவண்டப்
　　பொருளு முறையே யீன்றுமினனும்
விருப்பின் விளங்கு கன்னியுரு
　　விளங்கப் பொலிந்த பெருமாட்டி
விண்ணோர் பரவும் கோகன்ன
　　விமலன் துணையைக் காக்கவென்றே. 4

## நான்முகன்.

---

11. ஒலியுருவப் பிரணவத்தின் உட்பொருளென்
　　றறிவர்கணம் உணர வந்த
உரையிறந்த பொருளதெரிக்கும் மறைக்கடலில்
　　உரிமையினால் உண்மை காணும்
மெலிவில்பணி யுடையவனென் றதுபுகன்ற
　　மரபறிந்து விரிந்த ஞாலம்
விளங்குயிர்கள் படைத்தருளும் பரமனெனக்
　　கலைக்கிறைவி விரும்பி யேற்ற
தலைவனென வுலகுசொலுந் திசைமுகனை
　　மனநினைந்து தணிதல் செய்வாம்

தமிழ்க்கிறைமை தனியுரிமை தனக்கெனவே
தாங்குகுடி தனக்குத தாயாம்
நிலைமை பெறு சோகன்னத் தலத்திறைவி
யடியருளம நிறைநத செலவி
நிகமமறிந் துரைப்பரிய வருட்பெரிய
நாயகிதாள நிலைத்தற கெனறே. 5

இந்திரன்.

12. ஐந்தரு நின்று நினைந்த வணஞ்செய
ஆளம ராவதியான
அவுண குலாசனி முகிலினை யூர்தரும்
அமரகு லாதிபதி
செந்திரு நாயக னிளவ லெனப்பெறு
திருவுறு பிறவியுளான்
செயலுறு வேள்வியி னவிநனி லுரிமை
செறிநதவ லைப்பணிவாம்
சிந்தனை புரிபவர் நெஞசக மேவிய
திருவருள நிறையிறைவி
சிவனை மணநதுல குயிர்கள புரந்தருள்
தேவி புராதனிதாள
வந்தனை செய்திடு முரிமை யெனக்கருள்
வண்பெரு நாயகியை
வஞ்சமில் புதுவையில மன்னவர் தாயினை
வன்பொடு போற்றுறவே. 6

## திருமகள்.

---

13. உயிர்கள் வளர்ந்திட வுலகு மலிந்திட
வுளமுற வருள்தலைவி
உவமை கடந்துறு மெழிலுறு நலமமை
உருவுள செம்மலராள
பயிர்கள் கிளர்ந்திட மழைகள பொழிந்தருள்
பண்ணவ னிளவலெனும்
பண்டைய தெய்வத நெஞ்சிடை மருவுறு
பரவிய தாள்பணிவாம்
செயிர்கள் நிறைந்துள வுளனு மடைந்தருள்
தேவர்கள் தேவிசிவை
திருவளர் கோகன நாயகி புதுவையர்
சேவக மேயுடையாள்
அயிர்கள் மலிந்துள கடலெனு மாடையை
அணிநில மாமகளின்
அன்புறு மக்களை யின்பொடு காத்தருள
அமலையை யருள்கெனவே. 7

## கலைமகள்.

14. அறிவுதருங் கலைகளெலாம்
தனதுருவாய் அமைந்திருந்தும்
அறிபொருளை நாடுவளபோல
ஏடமையும அணிகரத்தள்

நெறிபெருகு மிசைதழுறைபின்
முடிபுணரு நிமலையெனல்
நெகிழவருநல லிசைபொழியும
வீணையினால நிறுவியவள
செறிவுடைய பரம்பொருளை
யுலகுணரத் தெளிவுறக்கந
திருவிளங்கு படிகமணித்
திருககோலை யேநதுமன்னை
நறியமலர்க் கழலிணைகள
நாடி மனத தடததடைப்பாம்
நம்புமவாக் கருளபெரிய
நாயகியைக் காககவென்றே. 8

## தூக்கை.

---

15. அமரகுலம வாழ அவுணகுல மாள
அருள்புரியு ஞான பரையாகி
அடியவர்கள தேடி நினையுமுரு மேவி
அகிலவுல காளு மனையாகும்
சமரவய வீர நெறிநிலவு தேவி
சரமசரம் வீறு பெறநாளும்
தகைமைதரு சூலி யிறைவிமயி டாரி
சரணமலர் நாடி யடைவோமே
இமயவரை வாழவு பெறவெழில்கொள் மேனை
இதயமகிழ தூய மகளாகி

எளிதில்வரு வானை வெளியவரு வானை
இனியதமி ழோது புலவோர்கள்
சமயமறி வானை மனமறிகி லாத
சருவனிட மேவு பெரியானை
தமிழிறை தாயை யருளெழுமிவாழு
தலைமையில் நீடு நினைவானே. 9

## சந்த மாத்ர.

16. அன்ன வூர்தி யமர்ந்தருள் பெண்மணி
ஆடலேற்றினை யூர்ந்த வளங்குபூண்
அணிகொள் கேகய வாகன மங்கையே
அரிய வியர சாண்டு நடத்துவாள்
மன்ன நீடரி யேறமா மாதுசீர்
மாமத தத்தயி ராவத மூர்பவள்
வலிய பேய்களை யூக்குவ ளாமெழு
மாத ராகழல் வாழ்த்தி வணங்குவாம்.
சொன்ன வண்ண நலங்க ளருளியே
சூழ்ந்த வன்பரை காத்தருள் நாயகி
தூய மாதவர் நான்மறை யோதினர்
தோத்தி ரஞ்செய முன்வரு நாரணி
தன்ன முமபிரி யாது தமிழிறை
தான தனமந் தழைக்கு மனத்துறை
சங்கரப் பெருமான் பெரு நாயகி
தாள்கள் வாழ்வுற நாடு நினைப்பினே. 10

## முப்பத்து முக்கோடி தேவர்.

---

17\. சோதித்த நூல்கள் புகல சொல்லுக் கடங்கரிய
தூய்மைப் பவித்திரை நல் வாய்மைச் சிறப்புடையள்
அன்பத்து மின்பத்து மொன்ன முற்ற நெஞ்சுடைய
சொற்செல்வர் நாட்டத் துவைத்திட்ட சோதியுரு
வாதித்த வாதியர்கள் காணரிய மாயையென
வாழ்வுள்ள தேவதையெம் மாலைக் கெடுத்தருள
வந்துற்ற செல்வித் தமிழ் மன்னர்க்கு நல்லன்னை
வரையற்ற புகழ்பெற்ற வள்ளற் பிராட்டியிவை
சாதித்த தற்செயலை யொன்று மறியாதவுயிர்
தர்க்கத்தின் மீறியவோர் சாந்தத்தை யெய்தவருள்
தாய்மைத் திருத்தலைவி சோகன்ம வாழிறைவி
தாவாத தந்தநெறி வாழப் புரிந்தருள்வா
ஆதித்தர் பன்னிருவர் பதினொரு ருத்திரர்கள்
ஆயுள்வேதியரிருவர் நாலிரு வசுக்களெனும்
அன்னோர்கள் தலைமைபெறு முப்பத்து முக்கோடி
யாகவுல கம்புகழு தேவர்தந் தலைவரே. 11

## 2. செங்கீரைப் பருவம்.

---

18\. எவரும் பருகிலாச் செவியமுத நுகர்வுறுநல்
ஏற்றத்தை நாடிநின்றேம்
இறைவனெம் பாசிவத் துரிமையென விமவான்
இயற்றிய தவத்துதித்தே

பாவரும் புகழ்பெருகு மேனைதனை கலசம்வரு
பாலமுத முண்டுவளரவோய

பனிவரைச சிகரமிசை விளையாடி மகிழுகின்ற
பசசை பசுங குழவியே

தாவறுந தவநெறியா தலையூனறு தாணமலர்கள
தம்மையெழி லாயமுடககித

தலைநிமிரத தொருகரத தளிரினை யெடுததொருகை
தரையினமீ தூனறியமைததே

தேவரும பெறலரிய சீரமுத மொழுகவே
செங்கீரை யாடியருளே

தென்றிருக கோகனனம வாழுபெரிய நாயகீ
செங்கீரை யாடியருளே. 1

19\. எழுததற கரியதாம ளிமிக்க ஞுறுமெய்மமை
ரதென வெடுததுரைககும

இனியபணி பூண்டருளும வேறபடைச செவவேளை
யெந்தைவரு கென்றெடுத்தே

கெழுமுநற சுவையமுலை மொழிகமத லாயெனக்
கேடடுமகிழ வெயதுமனனே

கிரியையினோ டிசசையே ஞானமா சத்தியாக்

தொழுதனைப பரவியே தாமெண்ணு பேறுறத்
தொண்டரினம் வநதணைநதே

சொற்செல்வம நல்குவாய நல்குவாய் என்னவே
சோர்விலா தோதிநிறகும

செழுமைமிகு புதுவைநா டாண்டருளு மரசியே
செங்கீரை யாடியருளே
தென்றிருக் கோகன்னம் வாழ்பெரிய நாயகி
செங்கீரை யாடியருளே 2

20. பொருளினை யடக்கும்நெறி டல்லாத சொல்லுண்டு
பொருள்கள செல்லுமிறந்ததாற
புலமைக்கு வளர்வெல்லை நிறுவியபா சொல்லுண்டு
புலவரு மருண்டுநிறக
இருளினை யடைந்த சொற்பொருளுண்டு சததியால
இன்னவை யெலாம்விளக்கும
இறைவிநீ யெனவுனை யுள்ளமலர் மறுநின்
றேதநிநிறபாா இமையவா
அருளினைப் புலகுபா தெய்வமே யடியமேம
ஆனந்த வெல்லையறிய
அருமறைச சிரமுறையு மெய்ப்பொருளை யோதியருள்
அன்னையே தமிழ்வேந்தன்
தெருள்வளரு புதுவையர சிமைபூ ணரசியே
செங்கீரை யாடியருளே
தென்றிருக கோகனனம வாழ்பெரிய நாயகி
செங்கீரை யாடியருளே 3

21. இந்திரத் தலைவனொடு கனலியும வாயுவும்
இறுமாந்த நெஞ்சா நின்றே
எதிர்வந்த வுருவமயா தென்னநன் கறிநிலார்
எளியபுன் சிறுதுருமபால

தந்திரத் தலைமைபெறு மறையினுட் பொருளறிவு
சாரமுயல் வினைறநாளில்
தத்துவச் செம்பொருளை யிறைவறன் றுரைக்கவரு
சங்கரீ யையாவநியே
மந்திரத் தெய்வமென மாதவர்கள் தெளிகின்ற
மாதுதிரி புரசுந்தரி
வள்ளன்மை யுருவெடுத் தோங்கிவளர் செல்வியே
வாக்கைக் கடந்தபரையே
செந்திறத் தமிழிறைவி புதுமைநக ராளியே
செங்கீரை யாடியருளே
தென்றிருக் கோகன்னம் வாழ்பெரிய நாயகீ
செங்கீரை யாடியருளே.

### வேறு

---

22\. பொற்கிரி விலங்கியின் மெய்யொரு பாதி
பொருந்திய மெய்யுருவே
புண்ணிய வன்பாத நெஞ்சக மாமலர்
பொழியு மதுதெளிவே
நற்குடி மங்கையர் வேண்டிய வாழ்வுகள்
நல்கு திருக்கவுரீ
நாவலர் நாவினு நெஞ்சினு நின்று
நலந்திகழு சேயொளியே
கற்பக நாடியர் உள்ள நிறைந்தருள்
கருணையின் வாரிதியே

கரிமுகன் வேலவ னெனுமிரு மதலையர்
    களிவொடு தழுவலையே
சிற்பரை கோகன சங்கர னமபிகை
    செங்கோ செங்கீரை
தென்றமிழ் நாடுடை யாயபெரு நாயகி
    செஙகோ செங்கீரை. 5

23. சத்துசித் தென்னவே யானந்த மென்னவே
    சாற்றிய மும்மையுமாய
சச்சிதானந்த வொருமையுமாகிய
    சங்கரன் மெயததலைவி
சுத்த சிவத்தின தானந்த தாண்டவம்
    சொல்லறு தூவெளியில
தூய விழியிணை கண்டு களித்தருள
    சோதியே ஞானநிதீ
அத்துவி தப்பொருள மெயக்குரு வோத
    வருளிய நாவிறைவீ
ஆரண நாடரு செயயவ ளேசிவை
    யாகிய சாகவபீ
சித்து விளங்கிய கோகன நாயகி
    செங்கோ செங்கீரை
தென்றமிழ் நாடுடை யாயபெரு நாயகி
செங்கோ செங்கீரை. 6

வேறு

24. அந்தர விமையவர் வந்து வணங்கவும்
    அன்பால் நன்றாளும்

அங்கண னருள்பெற முந்திய சிந்தையர்
அன்றே வந்தாரே
சுந்தர விமலநி யென்று புகழ்ந்தவர்
தொண்டே கொண்டாயே
சும்பநி சும்பரை யன்றுவ தஞ்செய்து
துன்பே விண்டாயே
சந்திர னிணையறு சுந்தர வதனியே
சந்தோ கம்பேசா
சங்கரி யருள்பொழி மங்கள சிவையுரை
தந்தா ளெந்தாயே
செந்திரு கலைமகள வந்தனை பெறுபவள
செங்கோ செங்கீரை
தென்றமிழ் உரிமைகொள் தொண்டையா இறைவியே
செங்கோ செங்கீரை. 7

25. விண்டல முனிவரா மண்டினர் நினதிசை
விண்டார் கண்டாயே
விஞ்சிய வவுணரை யண்டர்நி னருளினில்
வென்றார் நின்றாரே
கண்டிகை பொடியணி யெண்குண னிடமுறு
கம்பேர் மென்றோளீ
கங்கையின் வளரறு மைந்தரை முருகனே
கந்தா வென்றாயே
மண்டல வினைவலி விண்டிட நினைவரை
வந்தா ளெந்தாயே

வஞ்சகர் உளமிசை நின்றனை யெனுமவர்
வமபே நண்கோர்வாய்
திண்டிறல் அரசினர் வநதனை பெறுபவள்
செஙகோ செஙகீரை
தென்றமிழ உரிமைகொள தொண்டையர் இறைவியே
செங்கோ செங்கீரை. 8

## வேறு.

26. ஒளிபெறு ஞாயிறு நிகழுமுடி யாட
உவப்பால் நுதலாட
உரையறு புருவமும விழிகளு மாட
உநிதநே குமிழாட
தெளிவுறு முதநினை வெலுநகை யாடச்
சிறியித யிணையாட
சிவனருள மறைவுறு மகலமு மாடத்
திருவளா கரமாட
எளிவரு மடியவா நினைகழ லாட
எடுத்தே எதிராட
இணையறு மழலைகள நாவசை வாட
இசைதநே முகமாட
அளிவரு கருணையி னுருவுடை யம்பிகை
யாடுக செஙகீரை.
அமுதுறழ் தமிழிறை யடிமைகொள் சங்கரி
யாடுக செங்கீரை. 9

27. திருமறை நாறிய கழலிணை யாடச்
செந்திரு கலைமகளாம்

தேவியர் ஒப்பனை செய்குழ லாடச்
செந்தமிழ கேட்டளவில
உருகிய நெஞ்ச முவப்புட னுட
வுயிர்த தொகை வேட்கையுறும்
உரிமையை நல்கிய விழியிணையாட
ஒளிக்கதிர் போலொளிரும்
திருநுதல மேல்வரு சுட்டியு மாடத
தெய்விக நூலகள சொலும
செம்பொருள் காட்டிய புருவமு மாடத்
திருமுகம் வெயாவாட
அரிபுகு பரிபுர வடபிகை பண்பெற
வாடுக செங்கீரை
அமுதுறழ தமிழிறை யடிமைகொள் சங்கரி
யாடுக செங்கீரை. 10

## தாலப் பருவம்.

---

28. அருக்கோ தயத்தின் ஒளிபொருந்தி
யதன்க ணமைந்த வெம்மையின்றி
அணிகொள் திங்க ளுதயத்தின்
அழகு பொருந்தி மறுவகன்று
தருக்கோ டடிமை திருக்கழறகே
தம்மை யளித்துப் பிறதெய்வம்
தலையால் வணங்காப் பெருந்தவத்தோர்
தவத்திற் பழுத்த தனிப்பழமே

இருக்கோ லிடவும் இனுமறியா
இறைவி திருக்கோ கனமுடையான்
இடத்தே யமர்ந்து பலகோடி
யெழுநத வுலகம படைக்குமன்னே
பெருக்கோ டொழுகு வெள்ளாறு
பேணு மரசி தாலேலோ
பிறப்பும இறபபும ஒழிததருளும
பெருநா யகியே தாலேலோ. 1

29. உண்டே யுலகம் அறவுருவம
உடையாய் நினன திருவருளால
உரிமை யுளதே தவமுளதே
உயர்வு முளதே நலமுளதே
தண்டே னொழுகு கமலமிகா
தாட்போ துடைய பெருமாட்டி
தமிழைப் புரக்குந் தனிககடமை
தாங்குந தொண்டை மன்னர்குலம்
பண்டே யடிமை பூண்டருளிப்
பாலித் துவக்கும் பராபரையே
பாடற குருகும உளமுடையாய்
பழநான மறைசொல கோகனத்தான்
பெண்டே தமிழா பெருநதலைவி
பிறையோ நுதலாய தாலேலோ
பிறப்பும் இறப்பும ஒழித்தருளும்
பெருநாயகியே தாலேலோ. 2

வேறு.

30. மறைகள் தெளிதரருள பொருளை யுணர்ந்திட
வந்த பெருந்தவர்கள
மவுன நெறிப்பெறு சிவம தடைநதிட
வண்மை விளங்குகுரு
இறைவ னினைததன எவையும் நிகழதர
என்றருள எமமனையே
எழுதவு மோதவு மெண்ணவு மரியதோர
எழிலவளா மெயயுருவே
குறைகள பலப்பல நிறைவுறு சீவர்கள
கோதறு வாழவுபெறக்
குவளை நிகாப்புறு கருணை விழிதரிடு.
கோமள விழியிணையாய
பிறையை யிலச்சிய சடையினன் நாயகி
பெண்மணி தாலேலோ
பெருமைகொள நாயகி திருவளர் கோகன
பிடியே தாலேலோ. 3

31. பண்டைய நான்மறை நாடி யுணாத்திய
பண்புறு மெய்ப்பொருளாம
பழமையி னியலொடு புதுமையி னியல்கொள்
பரம்பொரு ளினறுணையே
எண்டிசை நாவலர் பாடிய சீர்த்தி
யியைபுறு தொண்டையாகோன்
எங்குல தெய்வ மெனச்சொலி யேத்தலும்
இன்பருள பூரணியே

கண்டன வாழ்வுகள் யாவையு மடியவர்
  கருதமு னேயருளிக்
காத்தருள கோகன நாயக ளுகிய
  கருணையி னுருவமுளான்
பெண்டென மன்பதை தாயென நின்றருள
  பெண்மணி தாலேலோ
பெருமைகொள் நாயகி இருவளா கோகன
  பிடியே தாலேலோ 4

வேறு.

32. உலகுகள் யாவும் ஒடுங்கிய நாளினில்
  உள்ளத னுளளுருவாய
உத்தம வைந்தொழில நட்ட மிடுஞ்சிவ
  னேடுள பெண்ணுருவே
வலமிட மாகி யமாநதனை யெனனினும்
  வளளலி னிததநடம
மக்கள் நலம்பெறு நோககொடு காணிய
  வந்த பெருநதலைவி
அலகில வாகிய மெயநநெறி சென்றுபி
  ளுய்ந்துணர் மாமறையின்
அநதமு மாதியு மெயகு நிறைந்தொளிர்
  அறிவுமெ யின்புருவே
தலைமை கொளுஞ்சிவை கோகன நாயகி
  தாலோ தாலேலோ. 5
தண்டமிழ மன்னா குடிப்பெரு நாயகி
  தாலோ தாலேலோ

33. பற்பல கோடிக ளாமுல கங்கள்
படைத்து வளர்த்திடினும்
பான்மையின் வேற்றுமை யின்றி விளங்கிய
பச்சை யிளங்குழவி
கற்பனை யெல்லை கடந்து நிறைந்தொளிர்
காதலர் காதலியே
காரண காரியம் யாவு மெனப்பெறு
கரிசறு மெய்த்தெளிவே
அற்பமு மெய்ந்நெறி செலலுணர் வறறவர்
அரியபல் பேறுமுற
ஆண்டருள் பூரணி நாரணி யன்புரு
வாகிய தெய்வதமே
சற்பத கோகன சிறபத நாயகி
தாலோ தாலேலோ
தண்டமிழ் மன்னர் குடிபபெரு நாயகி
தாலோ தாலேலோ. 6

வேறு.

34. அஞ்சலி கண்டனர் நன்புல
வோர்நீ பாவாலே
அன்புரு கும்பரி சுண்டென
நாலா லோர்வாரே
சஞ்சல சிந்தையின வநதமா
சோதி தேவேசீ
சங்கரி யம்பிகை யெண்குணன்
வாமார் தாயேநீ

அஞ்சலெ னுஞ்சொலை நன்கருள்
சீரோ டாள்வாயே
அம்பொனி னம்புயம் வென்றொளிர்
தாளாய் கேளாயே
தஞ்சந லந்தரு சங்கரி
தாலோ தாலேலோ.
தண்டமிழ் நனகருள அம்பிகை
தாலோ தாலேலோ 7

35. அண்டர்கள் தந்துயர் விண்டனர்
மேவார் வாழ்வாரோ
அன்பர்கள வந்தனை கின்றனர்
வாழ்வே மேவாரோ
வண்டின மொன்றிய கொன்றையர்
பாலே சேர்பூவாய்
வம்பலர் பொங்கிய குநதள
மானே மாறாதே
தொண்டர் நினைந்தன வன்பொடு
சூழ்வாய் பாவாயமா
அம்ப நிசும்பரை வென்றருள்
சூலீ மாதேவீ
தண்டை யணிந்தருள் சங்கரி
தாலோ தாலேலோ
தண்டமிழ் நன்கருள் அம்பிகை
தாலோ தாலேலோ. 8

## வேறு.

36. வெளிய மேனியை சங்கரி தாலோ தாலேலோ
விமல நாயகி சுந்தரி தாலோ தாலேலோ
அளியர் வாழ்வுற நின்றனை தாலோ தாலேலோ
அரிய நான்மறை கண்டவள் தாலோ தாலேலோ
தெளிவி ஞேருளம் வந்தவள் தாலோ தாலேலோ
தெளிகி லாரிடம் அன்புனை தாலோ தாலேலோ
பிளிறு மாகரி கொண்டனை தாலோ தாலேலோ
பெரிய நாயகி யம்பிகை தாலோ தாலேலோ. 9

37. நிறையும் வாழ்வருள் அங்கணி தாலோ தாலேலோ
நிகில லோகமும் நின்றவள் தாலோ தாலேலோ
குறைவில் பாடல்கள் கொண்டவள் தாலோ
[தாலேலோ
குறையும் நீள்கழல் ஒன்றினள் தாலோ தாலேலோ
மறைகள் ஆயகழ லம்புயை தாலோ தாலேலோ
மகன்மை மேவிய கந்தனை தாலோ தாலேலோ
பிறையை வாழ்வருள் அன்பனை தாலோ தாலேலோ
பெரிய நாயகி யம்பிகை தாலோ தாலேலோ. 10

## 4. சப்பாணிப்பருவம்.

38. உளமுறத் தெளிவதற கரியதவ முயல்கின்ற
உத்தமருள் மிக்க பெருமை
உள்ளபெரு வள்ளலர்கள் ஞானியர்கள்
வாழ்வுபெறு மூலவாத புகழ்பொருந்தும்
வளமிகப் பெறுதமிழ்த் திருநாட்டி னணிகெழுமு
மாண்புடைப் புதுவை நாட்டில்

வண்டமிழுக் கலைவளர்த் திடுமுரிமை பூண்டகுடி
மன்னவர் வணங்கு மிறைவி
இளவிரற் றளிருடைப் பதநினைத தடியவர்கள்
எண்ணம்நிறை வேறவென்றே
எவ்வகைய வாழ்வையும தாவுரிய கருணைவிழி
எங்கணு மலர்ந்துநோக்கத்
தளவமொத தலர்கின்ற விரன்மலரு பாணியாற்
சப்பாணி கொட்டியருளே
தமிழ்வளரும் வல்லியே பெரியநா யகியம்மை
சப்பாணி கொட்டியருளே. 1

39. செய்வதற குரியவினை தவிர்வதற் குரியவினை
செம்மை நெறி யோர்கிலாது
சிந்தையி னினைந்தவழி யைந்துவெம் பொறிகளும்
செலவிட்ட சிறறறிவினோ
னைவதற் குரியநிலை வாழ்க்கையிடை நணுகுதலு
நருசென நடுங்கிநின்றே
நாளைவரு தீவினையை யெங்ஙனம் வேறுமென
ஞானம் பெறுதிரங்கி
உய்வதற் கெளியநெறி யருள்வெள்ள மொழுகுநின்
ஒருவிழிக் காளாவதென்
றோர்கிலா அததகையர் செவிகேட்க மும்மையா
முலகவுயிர் யாவுமறியச்
சைவநற் பேறருள வல்லவொரு பாணியாற்
சப்பாணி கொட்டியருளே

தமிழ் வளரும் வல்லியே பெரியநா யகியம்மை
சப்பாணி கொட்டியருளே. 2

40. பெருமைக்கு மடைகின்ற சிறுமைக்கு மவரவர்கள்
பேணுநெறி சென்றறிந்த
பெட்பினுல் முறைநெறியி னரியபய னெய்தவே
பிறாவருந தாதியறமும
கருமமே கட்டளைக் கலலென்று மெய்ப்புலவர்
கட்டுரைத் திடுவதுண்டே
கருமங்கள தமமொடவை தருகின்ற பயனுமே
கட்டோ டழிநதகலவே
அருமையுறு ஞானத்தை யடையமுய லுகவென்ன
அறைகின்ற நூலுமுண்டே
அன்புநெறி யொன்றினை யெவவகைப் பேறுமுள
வாதலா லதுபற்றியே
தருமமற வாதறிவு நெறிசிறக வருளதேவி
சப்பாணி கொட்டியருளே
தமிழ்வளரும் வல்லியே பெரியநா யகியம்மை
சப்பாணி கொட்டியருளே. 3

41. அமுதைப் பருகுதல கருதிய வமரர்கள
அரிகுறை சொல்லாமே
அருளிற் புரியணி யிதுவென வருவிடம்
அரனருள் கொல்லாமே
கமையிற் பயில்வுறு கருணைப் பதியணி
கணனிரு கையானே

கருதித் தழுவுபு கடுவிட நிறுவிய
களநிகா குழலமானே

இமயக் கிரியிடை யெழிலுற வளர்வுறும்
இளமைய பிடியானைய

இதயத தடைவுற நினைபவா வினைகளை
எளிதினில வெலவாளே

குமரக் குழவியை மகிழ்வொடு தழுவுமை
கொட்டுக சப்பாணி

குலனிற் பழையவர் புதுவையர் இறைவியே
கொட்டுக சப்பாணி. 4

42. மறையைப் பயிலபவர் தமிழ்மொழி பயில்பவர்
மணமுற வுறவாடி

மதியைத தருநெறி யுலகினர் பயனுற
வளாவது செயுமாறு

கறையைப பெறுகளன் முனிவரர் அறிபொருள்
கரைவது துணிநாதன்

கருணைத் திருவுரு வுடையவ னருள்நெறி
கரிசற நிலையாகும

முறையைப பெறுதமிழ இறைமை கொள் புதுவையில்
முனிவரர் நினைவேவுறும்

முழுமெய்த் தவமயவுருவுள பரசிவை
முதமருள் விழிமானே

குறையைப் புகல்பவர் உளமலர் நிறைபவன்
கொட்டுக சப்பாணி

குலனிற் பழையவர் புதுவையர் இறைவியே
கொட்டுக சப்பாணி. 5

வேறு

43. அம்பினர் வில்லினர் வேலினர் வாளினர்
ஆகிய வீரரெலாம்

அஞ்சலி செய்தனர் வெற்றியை நல்கினை
ஆண்டருள் தாயெனவே

செம்பொருள் நாடிய நன்கவி வாணர்கள்
சேவரு கோமகளோர்

திப்பிய மெய்யருள் பெற்றருள கென்னவே
சிந்தை நினைந்தனரே

உம்பரும் வன்பொடு கண்டகர் தம்மைவெ
ஊற்றம் விழைந்தனரே

ஒப்பனை யற்று விளங்கிய செல்வியே
ஓதத தளித்தருளிக்

கொம்ப ரிளங்குயில் பண்பயில் மென்மொழி
கொட்டுக சப்பாணி

கோகன நற்பதி வாழ்பெரு நாயகி
கொட்டுக சப்பாணி. 6

44. அடியவர் நெஞ்சக மாரண மேகிகர்
ஆலய மாகுமென

அருளினடைந்தருள் பதயுக ளங்கொளும்
அம்பிகை சங்கரியே

படியவள் செய்யவள் நாமகள் என்பவர்
பண்டு பணிந்தனராய்

பரவுதல் புரியவும் அருளபுரி கவுரியே
　　　பைந்தமிழ் நாடுடை யாய்
கெடியவ னன்புறு தங்கை யெனும்பெயர்
　　　நின்ற பெருந் தலைவி
நீர்நிறை மாகடல் சூழுலகியாவையும்
　　　நித்திய வின்பமுறக்
கொடிகொள் தடித்தினை யடிமைகொள் றுண்ணிடை
　　　கொட்டுக சப்பாணி
கோகன நற்பதி வாழ்பெரு நாயகி
　　　கொட்டுக சப்பாணி　　　　7

## வேறு.

45. என்றமுள தென்றமிழை முனியகத் தியனென
　　　ஏற்றகுரு வாக வந்தே
இலக்கண நெறித்துறைகளை யெவையுநன் கருள்செயும்
　　　இயற்றமிழ்ப் புலவனுருக்
மன்றினட மிடுநின்ற சிவபராகடரினது
　　　வாமத்தி னமர்தேவியே
வாக்கெல்லை மனவெல்லை வீறிநின் றொளிர்கின்ற
　　　வள்ளற பெரும்பிராட்டி
தன்றுணைவ னைந்தொழிலு நன்குநிறை வேறவரு
　　　சக்தியே பக்திநிதியே
சாத்திரத் தொகுதியுறை சாரமே கோத்திரத
　　　தலைமீது வளர்குழவியே

குன்றனைய வினையறுத் தன்பர் நலமெய்தவே
கொட்டியருள் சப்பாணியே
குடியடிமை புதுவையரை சடையபெரு நாயகி
கொட்டியருள் சப்பாணியே. 8

46. புகலியம் பதியினிகற் பாணினைந் தழுதவொரு
புண்ணியச் செல்வனுக்குப்
போத பரிபூரண நலங்கனிந் தொழுகவே
பொன்னினும் வள்ளத்திலே
மிகவிழைந் தறுமுகனு முண்ணு முலைப்பயம்
வேட்டளவு தந்தருளியே
வேதநெறி சைவநெறி யோங்கவருள் புரிகின்ற
விமலையே யிமயவல்லி
தகவுகண் டடியர்நினை பேறெலாம் பொழிகின்ற
தண்ணளிகொள் கட்கடையினுய்
சமயங்கள் தொடர்கின்ற முடிவின்க ணிறைகின்ற
சாசுவத வானந்தமே
குகமதலை மழலைகேட் டுருகுசிறு செவியினுய்
கொட்டியருள் சப்பாணியே
குடியடிமை புதுவையரை சடையபெரு நாயகி
கொட்டியருள் சப்பாணியே. 9

வேறு.

---

47. இணருறு பூவால் வளமுறு காவே
எட்டுவ கொப்பானே

இமையவர் நாடே யெனவரு சீர்சால்
இக்கொடு நற்சாலி
மணமுற நேரே வளர்புது நாடே
வைததருள் மெய்ததாயே
மதிமலி நாவால் நிலமகிழ் தூயோர்
மட்டு மலர்க்கோவை
பணமலி தோளீ நினதருள் நாடா
பற்றொடு மிட்டாரே
பவுரிகொள தாளான் இடமுறு தேவீ
பச்சிள மைப்பேடே
குணநிறை நூலோர் உளமலர் சோதீ
கொட்டுக சப்பாணி
குளிர்தமிழ நாடீ புதுவையர் வாழவே
கொட்டுக சப்பாணீ. 10

## 5. முத்தப்பருவம்.

48. அடலவுணர் குலமழிய வயிலினொடு மயிலிவரும்
அணிகெழுமு குமரமதலே
அருமறையி னினியபொருள் தெளிவுபெற மொழிமழலை
அருளினொடு செவியினடையா
படவரலர் அறுவர்தரு பயமொழுகு முகமலரில்
மகிழ்வினொடு முத்தமருள்வாய
மதியணியு முடியுடைய பரசிவமு மனமுருக
மடியில்வரு கரியின்முகவன்

மடையொழுகு காமுழுக மலருநிறை சுவடுபட
வாய்நிறைய முத்தமருளும்

மதிநுதலி யிமயவரை யரசுமவன் மனைமகளும்
வரநினைய வருகுழவியே

கடவுளர்கள் தலைமைநிலை நிலைமைபெற வருளசெல்வி
கனிவாயின முத்தமருளே

கனிதமிழி னரசுபணி பெரியநா யகியம்மை
கனிவாயின் முத்தமருளே. 1

49. வெஞ்செயலகொ ளவுணகுல மாண்டொழிய [வமரகுலம்
வீடாது வாழ்வுபெருக

வேதமொழி யன்னமென வோதுதிரு மால்விபுத
வேந்தனொடு பாற்கடலையே

மஞ்சுபடி மந்தரமும வாசுகியும் முறைமையினில்
மத்துகடை கயிறாகவே

வானவரும் வஞ்சமிகு தானவரு மவ்வுழி
மதித்திட லுமேலெழு நவி

நஞ்சுவர வதுகண்டு மதனவினை கைவிட்டு
நாற்புறமு மவரோடவே

நாயகத் தெய்வத்தை நஞ்சமுண் ணச்செய்து
நன்முத்த மீந்தருளுவாய

கஞ்சமலா வஞ்சியர்கள் அஞ்சலிசெய் பதவல்லி
கனிவாயின் முத்தமருளே

கனிதமிழி னரசுபணி பெரியநா யகியம்மை
கனிவாயின் முத்தமருளே. 2

50. செம்மைச் செறிவு கருணையொடு
சிறந்த வெண்மை யிவைகளால்
திருமா மகளே பரசிவையே
திசைமா முகனா தலைவியென
மும்மைக் குணங்கள் புரிந்ததவம
முறையே விளங்க வெளிவருவாய்
முறையா லொருமைத தலைமையினால்
முழுமெய் யுருவும் பூண்டுளோயே
அம்மைக் கிணையா முறவுளதோ
அகில வுலகு மனையெனா
அருளால் உரிய பணிபூண்ட
அனையே கயிலை யிறையருளும்
மும்மைத் தமிழி னுரிமைகொளு
முதலவீ தருக முததமே
முழங்கு மறைதேர் கோமன்னா
முதல்வீ தருக முத்தமே. 3

51. கனியு மூளத்தாற் சிவகுறிக்குக்
காதர புனலாட் டுதல்புரிந்து
கருணை பொழியு மதனருகே
காவல் புரிந்து பணிபூண்ட
இனிய குணத்துக் கபிலைசெயும்
எழிலார் வழிபா டேற்றருளி
இறைமை சான்ற பதமதனுக்
கியைபா லருளுங் கோகனத்தான்

தனிமை தவிர்க்க வருமிறைவி
தமிழைப் புரக்கும் புதுவையிறை
தலைமீ தொளிரு முடியெனவே
சரண மலரை யளித்துவப்பாய்
முனிவர் வழிபா டுவந்தருளும்
முதல்வி தருக முத்தமே
முழங்கு மறைதோ கோகன்ன
முதல்வி தருக முத்தமே. 4

52. சங்கரப் பெயருடைய மங்களப் பொருளினொடு
சண்முகச் செல்வமுடனே
சஞ்சலத் துயரகல வன்பரைப் பரிவினொடு
தஞ்சம்வைத் தருள் தலைவியே
பொங்கலைத் ததிபயமொ டன்றுவிட் புலவரசு
பொங்குவெரு சினமடையவே
பொங்குருற் றிடுகிரியின் முன் புறீஇச் சிறுவயிறு
பொங்கவைத் தருளகரியமால்
தங்கையிர் பிறவிபெறு வருசியிற் சிறியவிடை
தண்ணமுத மொததமொழியாய
தண்டையிற் பொலிவுதரு மென்சுழற் றிருமலர்கள்
தண்டமிழ்க் கருளுமிறைவி
சிங்கநற் பரியிவரு மங்களத் தலைவியுமை
செம்பவள முத்தமருளே
செந்தமிழ்க் குரிமையினர் தொண்டையர்த மிறைவியே
செம்பவள முத்தமருளே. 5

53. விண்படரு கமுகின்வரு முத்தத்தை விழைகிலேம்
வேழத்தின் முத்தம் விழையேம்
வெண்சங்க மீன்றகலு முத்தத்தை நாடிடேம்
மீனுதவு முத்தம் வேண்டேம்
பண்பயிலு மங்கையர்கள் மென்களத் தெளிதின்வரு
பண்புடைய முத்த நினையேம்
பழுத்தகுலை தாங்குபெரு வாழையின் முத்தமும்
பைஞ்சாலி முத்த மறுசேம்
அண்டர்புல நின்றதிரு கின்றமுகில் முத்தமும்
அடியரேம் தேடல் தணியேம்
அவையெலாம் பவளத்தின் விளைவவோ வுலகத்தை
யாட்கொள்ள வலியுள்ளவோ
திண்கரும பந்தமற வன்பருள நின்றசிவை
செப்பவள முத்தமருளே
செந்தமிழ்க் குரிமையினர் தொண்டையர்த மிறைவியே
செம்பவள முத்தமருளே. 6

54. தழுவு மிறைவர் குழைய மகிழு
சகளை தருக முத்தமே
தவனின் முதிரு முனிவர் கருது
சதுரை தருக முத்தமே
இழுமென் மொழியின் மழலை மொழியும்
இறைவி தருக முத்தமே
இமய வரையன் மகிழ வளரும்
இனிமை தருக முத்தமே

கொழுமை செழுமை தழுவு புதுவை
குமரி தருக முத்தமே
குடியொடடிமை யரசை யுடைய
குமரி தருக முத்தமே
முழுமெய் அருளின் உருவமுடைய
முதல்வி தருக முத்தமே
முதிய தமிழின் உரிமை மருவு
முதல்வி தருக முத்தமே. 7

55. நிறையு முரக பணிகள புனையும்
நிமலை தருக முத்தமே
நினையு மடியர் நினைவ தருளும்
நிமலை தருக முத்தமே
அறையு மறைகள் அறிய வரிய
அமலை தருக முத்தமே
அமுத பருகு மமரர பணியும்
அமலை தருக முத்தமே
தறையும் விபுத ருலகு மறிவில்
தலைவி தருக முத்தமே
முறைமை தழுவு புதுவை யரயர்
முதல்வி தருக முத்தமே
முதிய தமிழின் உரிமை மருவு
முதல்வி தருக முத்தமே. 8

56. விதுவினை முடிமிசை யணிபவ னிமையவர்
மெய்ப்படு தத்துவமே

வெளியுற வறிவது கருதிய திருவுளம்
விச்சையி னூற்றுணரா

மதுமலர் புனைமுடி மகபதி முனமொரு
வட்டம திதகிருமா

வதனமு மிரணிய பணியணி யுருவமும்
வைததுவ குத்தனையே

கதுமென மறைவுறு பொருளது சிவமெனும்
கட்டுரை யிட்டருளால

கடவுளா பெறுபுகழ் அருளபவ னவனெனல்
கற்ப விரித்தனையே

முதுதமிழ இயலிசை பயிலபவர் தவபலன்
முத்த மளிததருளே

முழுமுதல் இடமமர் புதுவையர் குலநிதி
முத்த மளிததருளே. 9

57. மறைகளு மிதுவிலை யிதுவிலை யெனமொழி
வைப்பெனு மெய்ப்பொருளாம்

மதியணி சடைமுடி யிறையவ னிடம்வரு
வச்சையில் தத்துவமே

இறைமையு முறைமையு மெழுமையு நினகழல்
இச்சைகொள சிததபமே

எளிதினின் வருமென நினைபவ ருளரெனில்
எப்படி யொப்பிடலாம்

நறைவரு மலரணி தளியென வுடையவர்
நற்றிரு வுற்றிடவே

நலமுற விழியருள் பொழிசிவை கருணையின்
நததம் வளர்ததருளவாய
முறைபுகல் மறைமுடி நடமிடு கழலிணை
முத்த மளித்தருளே
முழுமுத லிடமமர் புதுவையா குலநிதி
முத்த மளிததருளே. 10

## 6. வாரானைப் பருவம்.

58. துறப்பினெறி யுலகுக்கு நன்குதெரி விக்கவரு
துயமா தவகுரவராம
சொற்செல்வ மாண்டசங் கரமுனிவர் மனமுறத்
தொழுததிரி புரசுந்தரீ
சிறப்பெனுஞ் சொலவிறை புலவர்புகல் வீட்டுநெறி
செல்வமென வடியருக்கே
திருமிகும் கருணையா லருள்கின்ற தேவியே
சிகரவிம கிரியின் மகளே
உறப்பெறும் பேறுதனை யுணர்வதற் கறிவிலா
துழலுவே முள்ளமலரில
உலவிநட மிடுகின்ற சோதியுரு வாகியே ,
உள்ளிய வெலாமுமருளிப்
பிறப்பையும் இறப்பையும் போக்கவருள் விழிநல்கு
பெரியநா யகிவருகவே
பிறைமுடிக் கோகன்ன நாதனை மணம்புணர்
பெரியநா யகிவருகவே 1

59. பொன்னையருள் பூமியாகல் மாணிக்கம் வயிரமொடு
புருட ராகமு மாகுனவாய்
புந்தியைப் பேரின்ப மெய்தச்செய் மழலைதரு
புத்திரப் பேறாகுனவாய்
அன்னையே யெனநின்று வேண்டுபவர் பலருளார்
ஆயினுமம தேவ தேவி
அருள்வெள்ள மாருநின் திறமறிந் தவரவர்க்
காவனவும் நன்றுணர்ந்தே
நின்னையே தந்தருள்க நின்னடியர் பேறென்று
நினைவினுல் நின்று பணிவார்
நீணிலந் தனிலுள்ள பலகோடி மக்களுள்
நிமலையே யெத்தாயரோ
பின்னையொடு சொற்கலைசி முடிதாழு மிணையடிகொள்
பெரிய நாயகி வருகவே
பிறைமுடிச் சேகரனை நாதனா மணம்புணர்
பெரிய நாயகி வருகவே. 2

வேறு

60. துதியைப் புரியு மடியாமனச்
சோதீ வருக இயலிசையாற்
சுவைசேர் தமிழைப் புரந்தருளும்
துணையே வருக வழியிலதாம்
நிதியைப் பொழியும் விழியிணைகொள்
நிமலே வருக நிறைமனதில்
நிறைவாய் விளங்கும பரமசுக
நிலமே வருக நினைந்தவர்க்குக்

கதியைத் தருவான் விடையூர்தி
கண்ணே வருக வியப்பவளா
கரிணீ வருக கரையி[illegible]
கங்கே வருக ச[illegible]றையும்
மதியைப் புறங்கொள் [illegible]னவல்லி
வருக பெரிய ந[illegible]கியே
வளமைத் தமிழ ரசு[illegible]று
வாழ்வே வருக [illegible]கவே. 3

61. அள்ளற் பழன நிறை[illegible]லை
யரசீ வருக வா[illegible]லாம
அல்லும் பகலும் மலர[illegible]ரியும்
அடியாய் வருக [illegible]டியவர்கள
உள்ளத்தகளி யொளிவிளக்காம
உருவே வருக வுருவிலா
ஒன்றே வருக வுருவ[illegible]
உடைய பெருமா[illegible] வருக
கள்ளக் கசடு நினையவொணா
கருத்தைக் கெடுப்பாய வருகவெமைக்
காக்கும் பொறுப்பே தனைத்தனக்கொள
கடவுள் திருக்கோ[illegible]முடைய
வள்ளற்பெருமான் உளப்புகுந்தாய
வருக பெரிய நாயகியே
வளமைத் தமிழ ரசுபெறு
வாழ்வே வருக வருகவே. 4

## வேறு

62. அமரி யெளிய வுருவு முடைய
அமலை வருக வருகவே
அமரர் மனமு மறிதரு மாமும
அலருமட நறவ வருகவே
சமரி சருவ சிவனை மருவு
தருணி வருக வருகவே
சரமு மசர மயமும் நிலவு
சலச வதனை வருகவே
பமரி முரலு குழலி புதுமைய
பழமைய வருக வருகவே
பரம னுடன முறைமை புணரு
பரிசை வருக வருகவே
குமரி கவுரி யிமய சயில
குழவி வருக வருகவே
குலவு தமிழி னுரிமை தழுவு
குடியி னிறைவி வருகவே.

63. மறையில் மறையு முருவு முடைய
மலரின் வதனை வருகவே
மகன்மை கரியு முருகு மமைய
வளரு மரசி வருகவே
சிறையில் நெடிய பகலு மினைதல
சிதைய வருளவை வருகவே

சிகர விமய வரையின் வளரு
சிறிய குழவி வருகவே
துறையின் மலியு மரிய பனுவல்
துருவ வெளிமை வருகவே
சுரர்கள் பிரமம் அறிய வருள்செய
சுவணா வருக வருகவே
குறையில தவமு நெறியு முடைய
குகையின நிலவு வருகவே
குலவுதமிழி னுரிமை தழுவு
குடியி னிறைவி வருகவே. 6

64. உலக வுயிர்கள் நினைவு முருவு
முடைய பெருமை வருகவே
உயிரு முளமு முரிமை தழுவு
உமையின வருக வருகவே
கலக மிடுவ பொறிகள் ஒருமை
கதுவ வருளமை வருகவே
கடவுள உடலில மருவு பசிய
கருணை யமலை வருகவே
விலக வரிய செயல்க ளுடைய
விமலை வருக வருகவே
விபுதர் தலைவி புதுமை யமர
விழைவு மொளிமை வருகவே
மலரின் மகளிர் பணியு முருவை
வருக வருக வருகவே

மகிமை நிறையு மாயினிறைவி
வருக வருக வருகவே. 7

65. இளமை யெழில்கொள முருக மதலை
இனிமை யறிவை வருகவே

இமைகள அசைவில அமரர் பணியும்
இறைவி வருக வருகவே

பளகில் மறைகள பரச வரிய
பழைய தமிழ் வருகவே

பரம பிரம நிலைமை யுணரு
பரமை வருக வருகவே

குளிறில் நிறைவு களவிக பலிவு
குலவு செயலே வருகவே

குசலம் வினவி யடியார் நினைவு
குளிர வருமை வருகவே

வளமை தழுவு புதுமை யரசு
மணனி னிறைவு வருகவே

மகிமை நிறையு மாயி னிறைவி
வருக வருக வருகவே. 8

வேறு

66. எதியிற் பெரியா னருந்தவத்தை
இருந் ருலக மறிந்துய்ய

இளமைப் பருவத் தனிமை கொளும்
இறைவி வருக புலவர் புகல

சுதியிற் புகுந்து கனிபபரிய
சோதி யுருவாய் விளங்கின்ற

சொல்லி னெல்லை கடந்தபெருந்
துணையே வருக குறைவனுகா
கிதியிற் செலுத்து கருத்துடையார்
கினேயே யதுவா றைறவறிந்து
கிலேயாம் பெருமபே றடையவருள
கிமலே வருக நுண்ணுணர்வின்
மதியிற் பெரியார மனகினேந்து
வணஙகும தலேவி வருகவே
வளர்கோ கன்ன மலேயிலவரு
மயிலே வருக வருகவே. 9

67. கல்லா லமாநது காலவருக்குக்
கருதற கரிய பொருளமவுனக்
கற்பால் விளக்கும் பரமபொருளின்
கருணே யுருவே வருகதமிழச்
சொல்லா லடியே முரையிறந்த
தூய்மைய பொருளா கினேந்துருகித
துயர்கீங் குதலுக் கருள பொழியும்
துரிய கிறைவே வருகவெமைப்
பொல்லா விணேகள தொடராது
புரைதீா ஞான விளக்கருளிப்
பொங்குமயக்க விருளபோக்கிப்
புரப்பாய வருக ஞானதவம்
வல்லார் புகழும் தமிழரிறை
மனத்தே மலர்ந்தாய் வருகவே

வளர்கோ கன்ன மலையில்வரு
மயிலே வருக வருகவே. 10

அம்புலிப் பருவம்.

68. கடல்பொங்க விரிகின்ற கதிர்களுளை யாதலாற்
காசினியும் விண்ணுமகிழக்
கரையற்ற தண்ணொளியை யன்பொழுக வீசிவரு
கடமைபூண் டுளையாதலால்
மிடல்பொங்கு மவுணரினம் வீழ்ந்தொழிய வமரகணம்
வெற்றிபெற வமுதருதவும்
வினைபுரிதி யாதலால் நீயுமொரு பெருமாட்டி
மேதகைமை யுளதகவுடையை
நடநன்கு பயிலாடல் புரியவுரி யவனொன்று
நல்லுளங் கொண்டெழுதலால்
ஞாலமுள பிறசெய்த வரியவிப் பேறுநினை
நணுகுவது நின்றவங்காண்
அடல்கொண்ட சிங்கவா கனிபெரிய நாயகியொ
டம்புலீ யாடவாவே
அரவிந்த வல்லிபணி கலியாண வல்லியொடு
மம்புலீ யாடவாவே. 1

69. அஞ்சலித் தளமுருகு மன்பாகின்ற வாழ்வுபெற
வருளுமொரு தலைவனருளால
அரவினொடு விளையாடி யிதழிமணை மலிகின்ற
வணிசடைக் காட்டினொளிர்வாய்

செஞ்சவித் திருவுடல மொருபாதி நிறமாறு
செயல்புரிந் தரசுபூணும்

தேவியுல கன்னைதன தருகுவரு தகுதியுள
சிறுவனென நினைநினைதலால்

மஞ்சிடைத் தவழ்குழலி யாதலால் மலைமுடியில்
மகிழ்வின்வரு திறமுடைமையால்

மலர்க்கர மசைத்துனை மதித்தரு கழைத்தனள்
மலைக்கொரு குலக்கொழுந்து

அஞ்செழுத் தருவன்மகிழ் வஞ்சியர்க் கிறைவியொடு
மம்புலீ யாடவாவே

அரவிந்த வல்லியணி கலியாண வல்லியொடு
மம்புலீ யாடவாவே. 2

70. மரபதியு மரகியம் பகவனும வாயுவும்
வந்தெதிரி னின்றவுருவின்

வகைமையறி யாதுள மயங்குகா லையிலவர்முன்
வந்தருளி யெங்குநிறையும்

பகவனரு ளறிகிலீர் போர்வென்ற பின்பவன்
பண்பினை மறந்துநின்றீர்

பரநீ ரெனவுண்மை நன்றே விளக்கியருள்
பரமகுரு வாகிநின்றாள்

தகவுடைய பிறர்பல ரிருக்கவே நினையென்னை
தண்ணளியி னலழைததாள்

சாத்திரத் தெல்லைகளை மீறியுயர் கோத்திரத்
தனையைகோ கன்னமுடையாள்

அகமகிழ முனிவர்புகழ் வளவன வல்லியொடு
மம்புலீ யாடவாவே
அரவிந்த வல்லியணி கலியாண வல்லியொடு
மம்புலீ யாட வாவே 3

71. விண்டனிற் சிலகால முழுவுருவ முடையையாய்
வெள்ளிய நிலாப்பொழிதியே
விதியினாற் சில நாள்கள் தேய்ந்து மாய்ந் தழிதியே
மேகங்கள் குழுமி வருமேல
மண்டலத் துயிர்களவிழி காணாத வாறுருவ
மறையுமொரு சிறுமையுளையே
வளர்விலாத் தேயவிலாக் கட்டிளமை யெழிலுருவின்
வல்லியிவள சழலகள நினையால
என்டவத் தலைவர்களு மெண்ணரிய பெருவாழ்வி
னெய்தலெளி தாமுறையதியே
இன்னருளி னினை யொருபொருட் டாயெண்ணி
யீங்குவரு கெனவழைத்தாள
அண்டருக் கரியளசிவ தொண்டருக் கெளியளோடும்
அம்புலீ யாட வாவே
அரியநான் மறைபரவு பெரியநா யகியினுட
னம்புலீ யாட வாவே. 4

72. உரைசெலா வுயர்நிலையி னியலபினமை யொளிதிகழு
முருவமுள பெரியளிவளகாண்
உததிநீர் பருகிவரு கரியகார் வரின்மறையும்
ஒருபரிதி யுதவுமொளியால்

தரையிஞேர் மனமருள விண்ணின்வரு சிறுமையுனே
தண்ணிலவு பொழியுமதியே
தாரகா கணமிடையில் வருதிரீ யரமகளிர்
தரையின்மகள் மலரின்மகளும்
வரையிலா வருள்கருதி வழிபாடு புரியவே
வருகருணே வல்லியியலே
வாழ்வெலாந் தரவல்ல தேவிநினே யருளிஞல்
வருகவென் ருள்தொண்டைமான்
அரசுதாள் பணியவருள் உரிமைபூ ணிறைவியொடு
மம்புலீ யாடவாவே
அரிய நான் மறைபரவு பெரியநா யகியிெஞடு
மம்புலீ யாட வாவே 5

73. குறைகள்பல வுடையநினே நிழிதகவு முலகுடைய
கோமாட்டி தகவுமறிவாய்
குளிரமுத கிரணமுள வெ ருமித முளங் கொண்டு
கொடைமல்கு தாண்மலரிலே
நிறைவுபெறு முள்ளமொடு பணிவுறு துணிந்தடைதி
நிகிலவுல கங்கள்கா றை
நிலவுதரு மேனியினள அமுதமழை பொழிதரூஉம்
நீலயின்ப விழிகளுடையாள்
நறைகமழு மலர்கள்பல வாயிர மெடுத்தறிவர்
நாளும்வழி பட்டொழுகவே
நல்வாழ்வு நல்குதாட் டாமரையள் வாவென்று
நற்கர மசைத்தழைத்தாள்

அறைமுரசொடரசுபுரி தொண்டையர்தமிறைவியொடு
மம்புலீ யாட வரவே
அரியநான் மறைபரவு பெரியநா யகியினொடு
மம்புலீ யாட வரவே. 6

74. தன்பெருமை தானறிகி லாதவொரு தன்மையாள்
தண்கழு லடைந்த வளவே
தலைவனா வெருசினத தாளாகி நிற்பினும்
தளிர்க்கரத தபயா ளைகாள்
முன்புகின் மனைவியாப பெறறவொரு முனிமுனிவின்
மூவுலகு ளோரு ழ
மூளைதழெழுந் துனைவாட்டு கயநோயின் வருதுயர்
மொழிந்தடிமை யெனவுயயலாம
மன்பதையர் பலபிறப் படைகொடிய வினைகளையு
மங்களத தீர்தத முடையாள
வருளவனம் வாழவரு பெருமாட்டி நின்னையிவண்
வருகென்று நாவசைததாள்
மன்பரவு தொண்டையாகள் குடிதாங்கி யொடுமாட
வருகவம் புலிவருகவே
மணமலியு மழகியொடு குணநிறைய விளையாட
வருகவம் புலிவருகவே. 7

75. தருநெறியி லரியதவ முயல்பெரிய கபிலமுனி
தனதுகுறை சொற்றவளவே
தருதும்வர மெனவருளு கலியாண வல்லியிரு
சரணமடை பேறு பெறுவாய்

புதுவதெளி தெனவெண்ணி நின்றனை யெனிற்கடிய
புன்சணடை சிறுமை யுறுவாய
புலமைநல மரியதவ மொன்றிலாச் சிறியைநீ
போதபூ ரணைதிருமுனே
மிகுபெருமை யுடையபல தேவர்களு முனிவர்களும்
வீழ்ந்துபணி காட்சிதாறைய
விரைவில்வரு கெனமிகவுமா விமலையருள கூரவே
மேதகைமை யெய்தநின்றாய
வதுளவன முகநயிறைநி மனமகிழ விளையாட
வருகவம புலிவருகவே
மணமலியு மழகியொடு குணநிறைய விளையாட
வருகவம புலிவருகவே. 8

## வேறு

---

76\. உருவா யுள்ளத் தருவா யருளால்
ஒளிமய மாயவருவாள
ஒழியா மெயமமைப் பெருவாழ் வருளற்
குரியாள் மறையறியாள
மருவார் முமமைப் புரமே பொடியா
வருமா நகையுடையாள்
மதியே நின்னைச் சரணு கதியால்
மகிழ்வா னருள்விழைவாள
கருவா யெய்தப் பெறுவாழ் வறவே
கடிதே வினைகடிவாள்

## 8. அம்மானைப் பருவம்.

---

78. தமராகு மரிமையினை மேனைக்கு முன்னமொரு
தக்கன மனை விகுரு ரருளவாய
சங்கரச் செல்வத்தை யெய்தவரு செல்வியே
சதுமுகன தேவியுடனே
அமராவ திந்தலைவ னிளவலென வருகண்ணன்
அன்புடைத தேவிவந்தாள
அழகுகுடி கொண்ட பரைபொன்னினால முத்திரைல்
அணிவயிர மரகதததால்
குமரேச னின்னிளரு செலவனிற மொக்குமக்
குறைவிலாச் செமமணியினால
கோமேதகததினால அம்மனைகள அவ்விருவர்
கொண்டுவந தார்கள்அன்னே
அமரேசர் பணியவரு பெரியநா யகியம்மை
அம்மானை யாடியருளே
அழியாத வழகுடைய கலியாண சுந்தரீ
அம்மானை யாடியருளே. 1

79. முடியா விறைஞ்சிநின் விழிநோக்க மெய்தவே
மொய்த்துளா ரரமடீளிரதாம்
முப்பத்து முக்கோடி தேவருங் குழுமிநின்
முகமதிய காந்திமுனனே
விடியாத மாயையிருள் விடியுமென வெண்ணியே
வேண்டுதல் புரிந்து நின்றார்

மெல்லியலர் தோழியர்கள் முன்வந்து கனகமணி
மிளிருமம் மனைகள் தந்தார்

நெடியோனை யண்ணனென் னுரிமையினி னுடையபெண்
ணேயமொடு கைகொடுப்ப

கிழல்பாவ வெழிலாக வெவர்மனமு மகிழவே
நெறியறிந் தூரியமு றறபால

அடியார்கள் குறைதவிர வாரவெபரிய நாயகீ
அம்மானை யாடியருளே

அழியாத வழகுடைய கலியாண சுந்தரீ
அம்மானை யாடியருளே. 2

80. மூமலமென் றடியவரை யணுகமுயல் பகையினைய
மோதியடி யோடொழிக்கும்

முறைமையுள தெய்வமே நவமணி புயிறறிய
முழுப்பொன்னி னுகனத்தே

கமலவல் லியரிருவர் தப்பெடு மார்ந்துமுக
கயிரவத் தொளியும் விழியாம்

கயலொளியும் முக்தப்பெல் பல்லொளியு மிரணியக்
காந்தியும் விழுந்தொளிரவே

விமலவங் கையினெடுத்தம்மனைகள் பேறுபெற
விண்ணுமண் ணுமகளிக்க

வெள்ளிமலை வள்ளறிரு வுள்ளமகிழ் கொள்ளவே
வினயவடியார் மகிழவே

அமலகோ கனநாத னிடம்வாழும் நாயகீ
அம்மானை யாடியருளே

அழியாத வழகுடைய கலியாண சுந்தரி
அம்மானை யாடியருளே. 3

81. சிகரமே பொன்னமையு மியவனை வளருமொரு
செல்வமே மேருவிலான்
தேவியே யெண்ணில்பல கோடியுலகங்கள்வரு
சிறுவயிற் றுப்பெண்மணீ
மகரமே யெறிகின்ற கடலின்விளை முத்தமும்
மலையின்வரு மாணிக்கமும்
வள்ளற் பிராட்டிநின் கைமலரில் நின்றொளிர
வாய்ந்ததவ மென்னைசொல்லேர
பகரவே யியலாத விளைவிழியி னொளிர்கிரண
பந்தி பாயந தவைசிறப்பப்
பாவையர்க ளுளமகிழ மாமனையி னின்னருகு
பாய்ந்துவரு காட்சியோடிய
அகரமோ டுசரமே மகரமாமிறைவியே
அம்மானை யாடியருளே
அழியாத வழகுடைய கலியாண சுந்தரீ
அம்மானை யாடியருளே. 4

வேறு

82. பேறருள் தெய்வத நீயென நன்குணர்
பெட்புடை யன்பரெலாம
பெண்ணர சாகிய யன்னைநின் சேவடி
பேசுவர் பாடுவரே
மாறடை யவுணரு நின்னருள் வேல்கொடு
வந்தடை மைந்தன் முன்னே

வாய்திற வாது மடங்கி விழுந்தனர்
மற்றவை யென்சொலுவோம்
நீறணி நெற்றியை யரவணி கையினை
நின்டலை பொன்மயமாய்
நின்முக வெழிலமுனா நிற்கவும் வெள்குறும்
நிலைபெறு மும்மணியால்
ஆறணி வேணியர் காமுறு மம்பிகை
ஆடுக வம்மனையே
ஆரண மோதரு நாரணி சங்கரி
ஆடுக வம்மனையே. 5

83. தேசுற முன்புரி மெய . தவ வாழ்வெனும்
செய்கை விளங்க வே
செம்மணி வெண்மணி பசுமணி யம்மனை
செவ்வியின் வந்துளவே
ஈசனை யோர்பகிர் நேச முடன்கொளும்
எம்மனை மூவுலகும்
எய்தரு பேற்றினை யெய்துற வேலவன்
ஏறிய மயிலினொடும
பேசற நன்கமை மழலைகள் நன்செவி
பெற்றனை யுண்மகிழ்வாய்
பின்னையு மாமக ளுந்தொழு மன்னையே
பிறைதொடு மாடநிறை
ஆசறு கோகன நாயகி சுந்தரி
ஆடுக வம்மனையே

துணையே துணைவன் வாய்ப்பிறந்த
சொல்லாஞ் சுருதி யறிவரியாய்
தோன்றி மறையு முலகத்தோரா
துயர மறியா வாழ்வுபெறப்
பிணையே நிற்கும் பெருமாட்டீ
பிடித்த சிறிய வர்மனைகள
பேற்றைப் பெறவே யமரருக்குப்
பிழை விளைத்த வவுணரினம்
இணையே கறங்க மாயத்தருளும
கிளியாடுகபொன் னம்மனையே
கிரிவாழ் பெருமா னிடமமரு ம
கிளியா டுகபொன் னம்மனையே. 8

86. தளவே புறங்காண் வெண்ணகையின்
சாயை படிய வெண்ணிறமாயத்
தமையே நிகராம் விழிப்பொளி
சார வுடனே கருநிறமாய்
அளவே யறியா வுலகங்கள
அனைத்து மாண்டை கைம்மலரில்
அடைவே புகலும் செந்நிறமாய்
அமைந்த மும்மைத் தோற்றமுறு
வளமேபெறுநல் லம்மனைகள்
மனமே மகிழ வெடுத்தருளி
வலிய வவுண மரபொடுங்க
வான வமர குலம்வளரக்

களர்வேற் படையா னுரைமகிழும்
கிளியா டுகபொன் னம்மனையே
கிரிவாழ் பெருமா னிடமமரும்
கிளியாடுக பொன்னம்மனையே. 9

87. அடையா மறைகள் கழன்மலரின்
அருமை யறிந்து புறநிற்ப
அருளால் மகிழும் அடியர்கணம்
அமய மறிந்தே யகம்புகுத
விடையான் இடத்தை உரிமையினால்
வேண்டும் பிராட்டி திருக்கோயில்
விமலச் செல்வ மதுபெறுதல்
விழைவார்க் குரிய பேறருளி
நடையால் விளங்கு புதுவையர்கோன்
நாட்ட மனைத்து நல்கிநிற்பாய
ஞான வுருவே ஞானியர்க்கும்
நாவின் செல்வம் படைத்தவர்க்கும்
கிடையா நெடுவாழ் வுடனருளும்
கிளியாடுகபொன் னம்மனையே
கிரிவாழ் பெருமா னிடமமரும்
கிளியாடுகபொன் னம்மனையே. 10

## 9. நீராடற் பருவம்.

---

88. விரிகின்ற வானவுல கெங்குமன் கோடியே
விண்ணவரை யின்பமூட்டி

வெள்ளிவரை யமர்கின்ற வள்ளல்சடை யாரணியம்
விழுந்துபனி மலையிலந்தே
இரிகின்ற திரிபதகை மந்தாகினிப் புனலொ
டினிய சானவியு மாய்
எழில்பொங்கு காளிந்தி வாணியொ டிணங்கியே
யிருநிலத் தவாகளெல்லாம்
விரிகின்ற பாவமற சழலவே நாடிவரு
விமலபகி ரதிநதிக்கே
விரையவே சென்றுதன் கன்றினை நினைந்துமடி
மிக்கபால் பொழியமீளும்
கரியவுடல் தாங்குபுண் ணியவுருவ கபிலைதரு
கங்கைநீ ராடியருளே
கங்காளர் பங்கிலுறை மங்கையே கபிலைதரு
கங்கைநீ ராடியருளே.

1

89\. பரிதிகுலம் வருபுகழ்ச் சகரமன் னவன்முன்பு
பரிமக மியற்றநினைவான்
பரிவிடுமுயுதார மதலையரை நிலைவரோ
பாயபரிப் பினபோகவே
நிருதர்பகை யிந்திரன் கபிலமுனி யோகபுரி
நீள்தவச் சாலையின்கண்
நெறியறிய வியலாது சாகரர் மயங்கவே
நினைந்துபரி யினைமறைக்க
அரசகுலக் வருமைந்தர் பாதலந் தேடியே
அரியமுனி சாபமேற்க

அவர்சாம்ப ராயநிலை கண்டுபின் மரபின்வரும்
அறிவனும் பகிரதன்றன்
கரியுரிவை போர்த்தருதல் அடிதொழுஉப் பரவவரு
கங்கைநீ ராடியருளே
கங்காளர் பங்கிலுறை மங்கையே கபிலைதரு
கங்கைநீ ராடியருளே. 2

90. பாணினைந் தோடும் புனிற்றிளங் கன்றையும்
பாராது பகிரதிக்கே
பகலுற நடந்துசென் றரியபுனல் செவியிடைப்
• பரிவினொ டெடுத்துவந்தே
கானநடு வீற்றிருந் தரியதவ முயல்முனிவர்
கபிலர்வழி பாடுவக்கும்
கண்ணுதற் பெருமானை யின்பநீ ராட்டவே
கருதரிய பணிபூண்டதாம்
ஆனினது மெய்யன்பு சோதிக்க வேங்கையுரு
வண்ணலார் கொண்டெய்தவே
ஆவியைத் தருவதாய் வாக்களித் தான்மேனி
யாட்டிமீள் காலையதுதான்
கானிதழி யார்க்குதவ வாக்குசிறு சுனையின்வரு
கங்கைநீ ராடியருளே
கங்காளர் பங்கிலுறை மங்கையே கபிலைதரு
கங்கைநீ ராடியருளே. 3

வேறு.

91. துதிபுகல் நாவினர் மனமுறை நாயகர்
சொல்லிய நான்மறையே

துருவியு மறிகவ தாயொளிர் தாண்மலர்
சூடிய சென்னியினூர்
மதிதெளி சோதியை மதிமுக வாரியை
மகவெனும் வேலவலவன்
வலிநிறை தீயரை யொருநொடி சாடுநல்
வளமுற வருளனையே
புதியதொ ருருவொடு பெருகிய திருநதி
புகுவது புதுவையினே
புலமையும் வளமையு முதவுவ ததனிடை
பொலிவுறு விழவுடையாய
மதிதொடு கோபுர வரையுறை நாயகி
வரநதி யாடுகவே
வருள வனத்துறை சஙகரி கமலைகயின்
வளநீ ராடுகவே. 4

92\. அறைகழ லடியினில முயலக னொளிவுற
ஆடிய சங்கரனூ
அரையுட லுரிமையி னடைதரு நாயகி
அமுதுறழ் தமிழ்வளமே
நிறைதரு புதுவையி னரசர்கள் குடியினை
நிலையுற வாண்டருள்வாய்
நிகில சராசர மடைய வளர்ந்திட
நிலவுறும் வயிறுடையாய
யொறைநெறி மேவிய கபிலரு மமரரும்
புவிமகள் திருமகளும்

புரைதவிர் வாழ்வுறு நினைவொடு பூசனை
புரிய வுவந்தருள் வாய்
மறைபுகழ் கோகன விறையவ னுயகி
வரநதி யாடுகவே
வகுள வனத்துறை சங்கரி கங்கையின்
வளநீ ராடுகவே. 5

வேறு

---

93. அமலக் கரியோன் மனோதத லைமை
அமைந்த திருவு நிலமகளும்
அமுதத் திருநாட் டியலமறந்தே
அவனி மகளிர தமைநிகாப்ப
மூமலக் குறையா துளத்திலெழும்
முறைகே டுடைய பிணக்குறவே
முதல்வ னருள்பெற் றிதுவழியே
முடிகுபாவ மொழிமினென
விமலத் தலைவ னருளவவன்
விருப்பிற் கிணங்கி வகுளவனம்
விரைந்தே புகுந்து தவம்புரிந்தார்
விழுமம் தீர்ந்தா ரவராட்ட
விமலப் பிடியே நினக்குரிய
வெள்ளப் புனலின் றுடிகவே
விபுதர்க் கரியாய் வெள்ளாறறின்
வெள்ளப் புனலா டுகவே. 1

94. அயன்வேதங்கள் பயின்றேத்தி
அருளை நாடி யடைந்துள்ளான்
அரியதவம்பூண் கபிலமுனி
அலரு மிலையு மெடுத்துவந்தார்
கயன்மீன் வென்ற விழியாட்டி
கடவுட் பெருமான மனையாட்டி
கருணைத் தமிழா கோமாட்டி
கலைகள் கடந்த பெருமாட்டி
செயன்மா ணமரா மகளிரொடு
திருமா மகளும் கலைமாதும்
திகழும் புதுமைப் புனலாட்டிச்
சிறப்புச் செய்ய நிறைந்துள்ளார்
வியன்கோ கன்ன வரைமயிலே
வெள்ளா றிதன்க ணாடுகவே
விபுதர்க் கரியாய் வெள்ளாற்றின்
வெள்ளப்புனலின் ஆடுகவே. 7

வேறு

95. முதண்ட கோடிகளை யம்மனைகழங் கென்ன
முறைமுறையி னாடிபரையே
மும்மையாக் கிளர்கின்ற பெருமைப் பரம்பொருளே
முழுவுடல மரையாக்கினாய்
காதண்ட வோடுவிழி பொழிகருணை மழையினாற்
காசினியும் வானவுலகும்
காத்தருள நின்றபெரு நாயகி புலிதொடரு
கபிலதரு கங்கைநீரில்

கோதண்ட பாணியுர மேவுதிரு மங்கையொடு
சோகனசம் வாழுமறையோன்
குளிர்நாவி லுறைமங்கை சைவலநிகர்க்குநின்
கூந்தலகோ தாட்டநின்றார்
வேதண்ட மேருகிரி யாளகின்ற தேவிபுரு
வெள்ளநீ ராடியருளே
விள்ளரிய சோகன்ன வள்ளவிடம் வாழுமுமை
வெள்ளநீ ராடியருளே 8

96. அரிபிரமா தயரொடு பொருந்தவே முககவடு
மாயொருமை காட்டுமொருவன
அருமறைகள் தெளிவரிய நிருவுருவ முடையபர
மானநத தாண்டவததான
கரியுரிவை புலியுரிவை மான்மழுவொ டரவமணி
கங்காள னையபரமன்
கண்ணிணை புதைததபுலக முககால மிருளவே
காசினியின வநதுமுனோனுள்
அரியசெய லெனவறிஞர் புகலுமுப் பததிரண்
டறங்களை வளாததசெலவி
அமலனொடு தைத்திஙகள அமுதநீ ராட்டமுறல்
அடியாதவ வாழுவுகணடாய
திரிபுவன கோடிகளை யுரிமையி னளித்தபரை
வெள்ளநீ ராடியருளே
விள்ளரிய கோசனன வள்ளவிடம வாழுமுமை
வெள்ளநீ ராடியருளே. 9

97. வள்ளலர்கள் கைபொழியும் நிதிபோல மழைதந்து
வண்டமிழ்ப் புதுவை நாட்டை
வண்மை நெறி தண்மைநல முண்மையொடு திண்மை
[வளம்
வாய்ப்பவர சாண்டதலைவீ
உள்ள முற வழிபடுமடியவர்கள் வேண்டும்வாழ்
வுவப்புட னளிக்குமுமையே
உயிரெலாம் வளருமவட விலேவயிற் றுய்மக்கள்
ஒருகோடி வந்துநின்றார்
தள்ளரிய புதுமனையொடின்கருணை போலவே
தான்பெருகு வெள்ளாற்றினில்
சாந்தநெறி கண்டதவ முனிவர்மன மகிழவே
தைப்பூச நன்னுளிலே
வெள்ளியு மெழுந்துளது ஞாயிறு பிறக்குமுனம்
வெள்ளநீ ராடியருளே
விள்ளரிய கோகன்ன வளளவிடம் வாழுமுமை
வெள்ளநீ ராடியருளே 10

## பொன்னூசற் பருவம்

98. விண்ணவரு மாமகளிர் தம்மினமு நின்னருளை
வேண்டியெதிர் வந்துநிற்பார்
விஞ்சைய ரியக்கர் கின்னரர்கள் கிம்புருடரொடு
மிக்கசா ரணரும் வந்தார்

மண்ணவரு மினியதமிழ மன்னரொடு பலகோடி
வந்துநின் முர்சளன்னே
வள்ளலருண் மிக்கசிவ ஞானமுணர் செல்வியே
மாணிக்கம் வயிரமுகதம்
எண்ணரிய விலையுரிய மரகதமொ டரியமணி
ஏற்றவகை நாற்றிட்டே
எழில்வளரு நாவல்வரு பொன்னு னியன்றிலகும்
இணையற்ற வூசலின்கண்
புண்ணியர்கள் கண்ணவருள் பெரியநா யகியம்மை
பொன்னூச லாடியருளே
பொன்னசல வில்லிகோ கன்னனிட முறைவல்லி
பொன்னூச லாடியருளே. 1

99. மன்றினிடை யைந்தொழிலு நன்கொளிர நட்டமிடும்
வள்ளற்கு வாய்த்தபெண்ணே
மறைகள்தெளி வரியவுரு வுடையசிவை யெனமுனிவர்
மனமுற வறிந்தவிறைவீ
குன்றினிடை விளையாடு குமரனொடு மதலையைக்
கொஞ்சிமகிழ் தம்பிராட்டி
குளிர்வகுள வனமதனில் வளருமெழில் கெழுமுசிறு
கோயிலிடை வந்ததாயே
நன்றமையு நவமணிகொள் மண்டபத் திடைநின்று
நாமகளும் மலரின்மகளும்
நலிலரிய கற்புடை யருந்ததி புலோமசையும்
நாற்புறமும் நின்றுட்டவே

புன்றலைய புல்வாயை வென்றவிழி விழியன்னை
பொன்னாச லாடியருளே
பொன்னசல வில்லிகோ கன்னனிட முறைவல்லி
பொன்னூச லாடியருளே. 2

100. மங்களநல் வாழ்வருள வந்தபுனல் கண்டருளி
மாமுனிவர் போற்றநின்றாய்
வாசநிறை மகிழுமலர் கிலமெலாஞ் சிந்திமலி
வகுளவன வாலயத்தே
ஐங்கரனு மறுமுகனு மன்பினுடன் விளையாட
ஆனிளங் கன்றும் வைத்தாய்
அண்டர்களு மடைவரிய தண்டமிழி னமுதத்தை
அடியருக் கருள்செய்தனாய்
தங்கமய மேருகிரி வந்தநிகர்க்குமொரு
சாம்புநத மண்டபத்தே
சத்தரிடி பத்தினியர் தொட்டசையு மூசலிற்
சங்கரனொ டன்புகுலவிப்
பொங்கிவளர் தொண்டையர்த மரபடிமை பூண்டவிலை
பொன்னூச லாடியருளே
பொன்னசல வில்லிகோ கன்னனிட முறைவல்லி
பொன்னூச லாடியருளே. 3

101. முத்தர்பெறு தெய்விகச் செல்வமே யன்பொழுகு
மூவர் தேவார விசையை
முறையினாற் கேட்டருளி வாதவூ ரடிகள்திரு
மொழிகளும் செவியினேற்றாய்

பத்தர்பலர் குழுமிநின் றறிவுருவ மாகுநின்
பண்பமைய மந்தையடியார்
பாடியுரு குந்திருப் பாடலு மிசைத்தரிய
பழமறைச் சாமத்தையும்
சுத்தவிசை மயமான பிறவினிய பாடலும்
சொல்லிநின் முர்களன்னே
சுவணத்தின் மயமாகி யுவமிக்க வியலாத
சோதிநிறை யூசலின்கண்
புத்தமுத மனையதமிழ் உரிமைகொளு மன்னையே
பொன்னூச லாடியருளே
பொன்னசல வில்லிகோ கன்னனிட முறைவல்லி
பொன்னூச லாடியருளே. 4

102. அரிகள்பண் பாடுமலர் கோடானு கோடியாய்
அலருமகி ழாணியத்தே
அணிகயிலை யிதுவென்று நிணகொழுக ளுடிவரு
மருவரை குடைந்தகோயில்
உரிமைகொளு மன்னையே யரியதவ முயல்கின்ற
உத்தமர்கள் நெஞ்சில்நின்றாய்
உயர்வற வுயர்ந்தவீர ணிய கிரியி னிகரென்ன
உள்ளதிரு மண்டபத்தே
நரபதிகள் மனைவியரும் மறையவர் மடந்தையரும்
நான்றவட மாட்டிநிற்க
நணுகுமவர் நினைவின்வரு நலமெலா நிறைவேற
நாவலம்பொன்னூசலில்

அருமறைகள் தாருவின் றடைவரிய பதவல்லி
ஆடியருள் பொன்னூசலே
அழிவில் மங்களவல்லி எழிலகொள சுந்தரவல்லி
ஆடியருள பொன்னூசலே. 5

103. வன்புநெறி யியல்புடைய வேடர்குல நாகனொடு
மயிலனைய ததைபுரியும்
வளமிக்க மெய்த்தவப் பேறுக வுலகின்கண்
வந்ததிண்ணக் குழமகன்
நன்புநிறை யுள்ளத்தின் மாண்பதனை வேதமுணர்
ஞான கோசரியுமறிய
நங்கைநீ கண்டுள மயங்கவே யெம்பிரான்
நல்விழிகள் செநநீர்தரப்
புன்புலனை வென்றதவ முனிவரினு மிக்கவப்
புண்ணியன் கண்ணையப்பிப்
புடவிபுகழ் கண்ணப்ப னுபகதை பாடியே
புலமங்கை யாட்டுகின்றாள்
அன்புடைய மலர்மகள்செய் நன்பணியு வந்தவுமை
ஆடியருள் பொன்னூசலே
அழிவில்மங் களவல்லி யெழிலகொள் சுந்தரவல்லி
ஆடியருள் பொன்னூசலே. 6

104. ஆடக கிலோச்சயம் வில்லென்று கொண்டுலக
மருள்பொங்க வாண்டமுறையால்
அன்புடையர் கொண்டாட வம்பர முவந்துறையு
மமரர்கண நின்றாடவே

காடகத் துறைகாளி தன்றிறமை காட்டும்
கருத்துட னெதிர்த்தாடவே
காணரிய காட்சியென முனிவரிரு வோர்மனம்
கண்ணொடு மலர்ந்துநிற்க
ஏடகத்தறிவரிய மெய்ப்பொருள் விளக்கியே
எடுத்தபதம் ஊன்றுபதமென்
றிருகழலு மம்பிகைநின் னருகினில் நிறுத்தியே
யெம்மையாண் டருளவெனவே
ஆடியுல காள்பரம னோடமரும் நாயகி
ஆடியருள் பொன்னூசலே
அழிவில் மங்கள வல்லி யெழில்கொள் சுந்தரவல்லி
ஆடியருள் பொன்னூசலே 7

## வேறு

105. பஞ்சன மெல்லடி விஞ்சையர் மங்கையர்
பாடினர் நின்றனரே
பாவையர் தேவமடந்தையர் ஆடினர்
பண்பொ டடைந்தனரே
செஞ்சொலின் விஞ்சிய நாமகள் வந்தனள்
திருமகள் வந்தனளே
திருமிகு மித்திர பத்தினி யெய்தினள்
சேவையுவந்தனளே
வஞ்சியர் மாதவ பன்னியர் வந்து
வணங்க நிறைந்தனரே

மண்டல மங்கையர் மண்டபமெங்கும்
வளர்ந்து செறிந்தனரே
அஞ்சலி கண்டவர் நெஞ்சுறு மம்பிகை
ஆடுக பொன்னூசல
ஆரண நாடிய கோகன நாயகி
ஆடுக பொன்னூசல. 8

106. பொன்புனை வில்லொடு திரிபுர முன்பு
புகைபடக் நகைத்த பிரான்
புண்ணிய மேய தனஞ்சய னன்று
புரிந்த தவத்துருகா
மின்பொரு மேனியை நின்னொடு காயொடும்
வேட னெனப்புகுதா
மிக்க கொடுஞ்செயல் புக்கதொர் பன்றியை
வீழ்த்திய வவ்வளவே
தன்பெரு வன்மை மதித்த தனஞ்சயன்
தன்னொடு மறபொருதே
தகுதிகொள் பாசுப தந்தரு நாயகன்
சக்தி விளக்குமையே
அன்பரை யாள்விழி யாய்பெரு நாயகி
ஆடுக பொன்னூசல்
ஆரண நாடிய கோகன நாயகி
ஆடுக பொன்னூசல். 9

107. பாண்டிய மன்னவ னட்ட மிழைத்திடு
பண்கனி மன்றிடையே

பல்வகை யானு நடித்தன ளேய்ந்து
　　பதங்களை மாறறுகெனு
வேண்டிய வெல்லையில் மதுரையில் இருகழல்
　　வேற்றுமை தோறறிநடம
விஞ்சையி னுடிய தப்பெரு மானிடம்
　　மேவிய மெய்த்தலைவி
பூண்டுள வணிகளின் நல்லொளி விஞ்சிய
　　பொன்மணி மன்றிடையே
பூமகள நாமகள் இந்திரை யாதியர்
　　பொன்வட மாட்டுதலால்
ஆண்டருள் தெய்வத சங்கர சுந்தரி
　　ஆடுக பொனனூசல
ஆரண நாடிய சோகன நாயகி
　　ஆடுக பொன்னூசல். 10

---

## வாழ்த்து.

---

108\. மறையவர் வாழிய மன்னவர் வாழிய
வணிகரும் வாழியவே

மண்மகள் மக்களும் வாழிய வுழவெனு
மாதவம் வாழியவே

குறைவறு மெய்ம்மை யுணர்த்திய வைதிக
கொள்கைகள வாழியவே

கோதறு மாதவ நோன்பறு முனிவரர்
கூடினர் வாழியவே

நிறைவுறு செல்வமு முலகினர் நன்மையு
நிலவ வறம்புரியும்

நீள்புகழ் வாழ்வுறு புதுவையர் பேறெனு
நிருபதி வாழியவே

கை ி கண்டனை நாடிய ரண்டினர்
கணமுற வாழியவே

காரணி நாரணி கோகன நாயகி
கழன்மலர் வாழியவே.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 28 | 19 | .... | வேறு |
| 32 | 5 | பதியினிகற் | பதியினிற் |
| 36 | 9 | .... | வேறு |
| 37 | 17 | .... | வேறு |
| 38 | 23 | .... | வேறு |
| 50 | 20 | லையின்ப | நிலையின்ப |
| 56 | 22 | யன்னை | வன்னை |
| 61 | 16 | மியற்ற | மியற்று |
| 65 | 18 | முதண்ட | மூதண்ட |
| 70 | 19 | வீரணிப | வீரணிய |

# இப்புத்தகம் கிடைக்குமிடங்கள்

---

1. புதுககோட்டை காலேஜ
   கோவாபரேடிவ் ஸொஸைடி.

2. T. G. கோபால பிளளை,
   புததக வியாபாரம்
   தெப்பகுளம
   திரிசிராப்பளளி.

3. V. S. சுவாமிநாதன,
   புத்தக வியாபாரம
   மேலகோபுரம
   மதுரை.